Annual Subscription Rs. 6 | 13th June 1937 | Price 2 As.

# சுதேசமித்திரன்

Vol. 8 | வாரப்பதிப்பு | No 19

## THE SWADESAMITRAN ILLUSTRATED WEEKLY

ஜப்பானிலுள்ள ப்யூஜி சிகரத் தோற்றம்.



படத்தில் காணப்படும் இந்த ஆஸ்திரேலிய ஆடு சமீபத்தில் 3,150 பவுனுக்கு விற்கப்பட்டது. இதன் உரோமம் மிக உயரிய கம்பளி செய்வதற்கு உபயோகிக்கப்பட்டதாம்.

**நமது சிறுகதை**

# ஆற்றில் சந்தித்த அணங்கு

"சாமி"

சூரியனின் மாலையொளி அங்கங்கே விழுந்துகொண்டிருந்தது. பனி மெல்ல பெய்துகொண்டிருந்தது. மலைக்காற்று 'உஸ், உஸ்' என்று உயர்ந்த மரங்களினிடையே வீசிக்கொண்டிருந்தது. இரண்டு சரிந்த மலைகளினிடையில் ஒரு காட்டாறு விரைந்து சென்றுகொண்டிருந்தது. அவ்வாற்றில் ஆங்காங்கேசுழல்கள் நிறைந்திருந்தன. ஆற்றின் நடுவில் ஒரு சிறிய படகு மெல்ல அசைந்துகொண்டிருந்தது. அப்படகில் ஒரு யௌவன குமாரி மேலாடையின்றி ஒரு நீண்ட கையுள்ள சட்டையை அணிந்துகொண்டுபடகைச் செலுத்திக்கொண் டிருந்தாள். அவள் அருகில் மற்றோர் சிறுமி அவளை எதிர்நோக்கி ஆவலோடு அவள் முகத்தையே நோக்கிக்கொண்டிருந்தாள். ஆற்றின் ஊடே சென்றுகொண்டிருந்த படகு ஆற்றின் மற்றோர் திசையை நோக்கித் திரும்பிற்று. அந்தோ! படகு ஒரு சுழலில் அகப்பட்டுக்கொண்டது. படகோட்டி மங்கை தன் வலிமையெல்லாம் உபயோகித்துத் துடுப்பை வலித்துப்படகை சுழலினின்றும் மீட்க முயற்சிக்கின்றாள் பயனில்லை. படகு இரண்டு தடவை சுழன்றது. மூன்றாவது தடவை ஆற்றில் மூழ்கியது. பெண்கள் இருவரும் ஆற்றில் தத்தளிக்கின்றார்கள். நிரபராதிகளை மீட்பது இயற்கையின் நியதியன்றோ! வானிலிருந்து முளைத்ததுபோல் ஒரு வாலிபன் ஆற்றில் குதித்தான். பெண்கள் இருவரையும் கரைக்குக்கொண்டுவந்து சேர்த்தான்.

ராஜசேகரன் தன் உடல் நலங்கருதி சிலகாலம் மலைவாசம் செய்வதற்காக மலையாளம் சென்றான். அங்கே மேற்கு மலைத் தொடர் கொச்சி நாட்டில் பிரவேசிக்கும் பாகத்தில் மலையடிவாரத்தில் ஒரு பட்டினத்தில் தங்கினான். அவ்வூரில் அவன் தங்கியிருந்த விடுதி மலையடிவாரத்திலுள்ளது. அங்கிருந்து மலைக்குச் செல்ல வேண்டுமானால் உடனே மலையை நோக்கி ஏறவேண்டியதுதான். ஒருநாள் மாலை ராஜசேகரன் வழக்கம்போல் மலைமேல் உலாவி வரச் சென்றான். அன்று மாலை மிக மனோகரமாக விருந்ததால் அவன் தன்னை மறந்து மலைமேல் வெகுதூரம் வந்துவிட்டான். பிறகு ஆறு குறுக்கிட்டவுடன், தான் வந்த தூரத்தை அறிந்தான். அங்கு நின்றுகொண்டிருந்தபொழுதுதான் ஆற்றில் மூழ்குவோரின் அபயக் குரல் கேட்டு அத்திசையை நோக்கி ஓடி அவர்களைக் கரை யேற்றினான்.

அம்மங்கை ராஜசேகரனை நோக்கி, 'ஐயா, எங்கள் இருவரின் உயிரையும் காப்பாற்றிய தங்களுக்கு நான் என்னென்று நன்றி கூறுதல் பொருந்தும். தாங்கள் வந்து உதவி புரிந்திடச்சற்றே தாமதித்திருப்பினும் நாங்கள் மாண்டே போயிருப்போம்' என்று கூறினாள்.

ராஜசேகரன், 'பெண்ணே, என்பால் நீங்கள் நன்றி செலுத்துவது தகுதியல்ல. யாவும் இயற்கையின் விளைவின்பாலே நடந்தேகும். ஆதலின் நீங்கள் உயிர் மீண்டதற்கு இயற்கையின்பால் அன்பு செலுத்தலே தகுதியாகும்' என்றான்.

அவள், 'நீங்கள் எவ்விதம் கூறினாலும் நாங்கள் தங்களுக்கு மிகவும் கடமைப்பட்டிருக்கிறோம்—குளிர் அதிகமாகிறது. நாம் ஈர உடையுடன் இங்கு நின்றுகொண்டிருக்க வேண்டாம். சமீபத்தில் எங்கள் வீடு இருக்கிறது. வாருங்கள், செல்வோம்' என்றழைத்தாள்.

அவள் இயற்கை எழிலும், அன்பு கனிந்த இனிமையான சொல்லும் ராஜசேகரனை வசீகரித்தது. அவள் முன்செல்ல ராஜசேகரன் அவளைப் பின்தொடர்ந்து சென்றான். இருவருக்கும் பின்னே வேலைக்காரச் சிறுமி சென்றாள். மூவரும் ஒரு கொடிப்பாதையின் வழியாகச் சென்று வீட்டையடைந்தார்கள்.

அங்கே ராஜசேகரன் தன் உடைகளை மாற்றிக்கொண்டான். அப்பெண்மணி கொடுத்த தேநீர் அவன் குளிர்ந்த தேகத்திற்கு இதமாக இருந்தது. பிறகு இருவரும் சம்பாஷித்துக்கொண்டிருந்தனர். அப்பெண்மணி தன் தந்தை தம் தேயிலைத் தோட்டத்தைப் பார்ப்பதற்காகச் சென்றிருப்பதாகவும் அத் தருணமே திரும்பிவருவாரென்றும் கூறினாள்.

அச்சமயம் முகமெல்லாம் நரைத்த மயிர்களடர்ந்த ஒரு வயோதிகர் அவர்கள் இருந்த அறைக்குள் நுழைந்தார். அவர் தளர்ந்த பலம் பொருந்திய அவயவங்களும் குழிந்த கூரிய கண்களும் அவர் மிகுந்த மனோபலம் படைத்தவர் என்பதை எடுத்துக் காட்டிற்று. அவர் ராஜசேகரனை நோக்க ஏதோ அருவருப்புடன் நெற்றியைச் சுளித்துக்கொண்டு ஒருவிதமாகப் பார்த்தார். அதற்குள் அப்பெண்மணி அவருக்கு ஆசனமிட்டு உள்ளே சென்று அவருக்கும் ஒரு கோப்பை தேநீர் கொண்டுவந்து கொடுத்தாள். அவர் தேநீரைப் பருகிக்கொண்டே அப்பெண்மணியை விளித்து 'ஜயா, இவ்வாலிபர் யார்?' என்று வினவினார். அவள், தான் அன்று ஆற்றில் மூழ்கிப் போனதையும் ராஜசேகரன் காப்பாற்றினதையும் கூறி, அவனை அறிமுகப்படுத்திவிட்டு அவனுக்கு அப்பெரியவர் தான் தன் தந்தை ரகுபதி தேவர் என்றும் மேற்குக் கரையிலுள்ள பல பெரிய தேயிலைத் தோட்டங்களுக்குச் சொந்தக்காரர் என்றும் கூறினாள். அப்பெரியவர் அவள் கூறியதில் எவ்வித வியப்பும் கொள்ளாமல் ராஜசேகரனுக்கு இரண்டொரு சாதாரண உபசார வார்த்தைகள் கூறிவிட்டுத் தன் அறைக்குள்சென்றார். ராஜசேகரன் அன்று இரவு அங்கேயே உணவுகொண்டு தனக்குக் காண்பித்த ஓர் அறையில் படுக்கைக்குச் சென்றான்.



எலமனூரிலுள்ள ஆடும் பாலம். திருச்சிக்கு 14 மைல் தூரத்திலுள்ள எலமனூரிலுள்ள இந்தப்பாலம் 45 அடி நீளமிருக்கிறது. கற்களாலும் சுண்ணாம்பாலும் கட்டப்பட்டிருக்கிறது. ஸ்ரீரங்கப்பட்டணத்திலிருந்து சமீபத்தில் இடிந்துபோன பாலத்தைப்போல் இதையும் அசைத்தால் எல்லாப்பக்கங்களிலும் அசைகிறது.

வெளியில் காற்று 'விர் விர்' என்று ஜன்னல்களில் வந்து மோதிக்கொண்டிருந்தது. காட்டு மரங்கள் ஒன்றோடொன்று இழைவதனால் உண்டாகும் ஓசை பயங்கரமாக ஒலித்துக்கொண்டிருந்தது. ராஜசேகரன் தூக்கமில்லாமல் படுக்கையில் புரண்டுகொண்டிருந்தான். அவன் ரகுபதிதேவரைக் கண்டது முதல் அவர் ஏதோ பல ரகசியங்களை மறைத்து வைத்துக்கொண்டிருக்கிறார் என்று அவன் மனதில் பட்டது. அடிக்கடி ஜயாவின் உருவம் அவன் மனக்கண்முன் எழுந்தது. உடனே சமீபத்தில் ஏதோ பேச்சரவம் கேட்கத் திடுக்கிட்டு தன் படுக்கையினின்றும் எழுந்தான். தன் அறையைவிட்டு வெளியே வந்தான். எதிர் அறையிலிருந்து சாளரத்தின் வழியாக வெளிச்சம் வருவதைக் கண்ணுற்றான். பிறகு சாளரத்தின் அருகே சென்று உள்ளே கவனித்தான். அவன் உள்ளே கண்ட காட்சி அவனைத் திடுக்குறச் செய்தது. ரகுபதி தேவர் ஒரு விளக்கின் அருகில் உட்கார்ந்திருந்தார். அவர் கையில் ஒரு யுவதியின் புகைப்படமிருந்தது. அவர் கண்களிலிருந்து நீர் தாரை தாரையாக வழிந்து கொண்டிருந்தது. பிறகு அவர் பல்லைக் கடித்துக்கொண்டு கூறிய இரண்டொரு வார்த்தைகள் பின்வருமாறு ராஜசேகரன் காதில் தெளிவாக விழுந்தது. 'கண்ணே, ஜகதா, உன் வாழ்க்கைக்குப் பங்கம் விளைவித்த அச்சண்டாளனை எவ்வகையிலும் கொன்றே தீருவேன். பின்னும், அவன் பெண்ணும் உன்னைப்போலவே உலக வாழ்வை வெறுத்து மாளச்செய்கிறேன். அப்பொழுதுதான் என் மனத்திடை அமைதி நிலவும்!'

பிறகு ரகுபதி தேவர் விளக்கை அடக்கி வைத்துவிட்டு படுக்கைக்குச் சென்றார். ராஜசேகரனும் தன் அறைக்குச் சென்றான். அவனுக்கு உறக்கமே வரவில்லை. ரகுபதி தேவர் கூறிய வார்த்தைகளை எண்ணி எண்ணி உண்மையறியாமல் மனங் கலங்கினான்.

மறுநாள் காலை ரகுபதி தேவர் தன் தேயிலைத் தோட்டத்திற்குக் கூலி ஆட்கள் பொருக்குவதற்காக வெளியே சென்றார். ராஜசேகரன் ஜெயாவிடத்தில் தந்திரமாக அவள் தந்தையைப்பற்றி விசாரித்தான். அவள் அவர் தனது உண்மை தந்தையல்லவென்பதையும் அவள் விவரமறியாக் குழந்தைப் பருவத்தில் அவளை எங்கிருந்தோ கொண்டுவந்து வளர்த்ததாகவுமறிந்தான். பின்னும் ரகுபதி தேவர் அடிக்கடி கல்கத்தா சென்று வருவதாகவும், திரும்பி வரும்பொழுது மிகுந்த கவலை தோய்ந்த முகத்துடன் இருப்பாரென்றும் தெரிந்துகொண்டான். உடனே ரகுபதி தேவர் பழிவாங்க எண்ணியது ஜயாவும் அவள் தந்தையும் தான் என்பதை உணர்ந்தான். நிரபராதி ஜயாவை நினைத்தவுடன் அவன் கண்களில் நீர் தளும்பிற்று. எப்படியும் அவளைக் காப்பாற்ற வேண்டுமென்று முடிவு செய்துகொண்டான். பிறகு அவளிடம் விடை பெற்றுக்கொண்டு தான் மீண்டும் வந்து அவளைப் பார்ப்பதாகக் கூறிவிட்டுத் தன் விடுதியை நோக்கி நடந்தான்.

கல்கத்தாவில் 'ஸௌத் இன்டியன் காலனி'க்கருகில் ஒரு பெரிய ஹோட்டல் இருக்கிறது. அதில் இந்தியாவில் பல பாகங்களிலிருந்து வரும் பிரயாணிகளுக்கு அவரவர்கள் பிரதேசத்திற்கேற்ற உணவும் அவர்கள் பாஷை தெரிந்த பணிமக்களும் வழங்கப்பட்டன. ராஜசேகரன் ஜயாவிடமிருந்து திரும்பிய ஐந்தாம் நாள் கல்கத்தாவிற்கு வந்து சேர்ந்தான். அவன்முன் கூறிய ஹோட்டலில் வந்து தங்கினான். அவனுக்குக் கிடைத்த பணிமகன் ஒரு சிறுவன். நல்ல சுறுசுறுப்புள்ளவன். எப்பொழுதும் ஏதாவது பேசிக்கொண்டிருப்பான். ராஜசேகரன் அவனோடு பேசி ரகுபதி தேவர் அவ்விடுதியில் தான் தங்குவது என்பதை அறிந்துகொண்டான். பிறகு அவர் செல்லும் ஒவ்வொரு இடத்திற்கும் தன்னை அழைத்துச் செல்லும்படி சொன்னான். அன்று மாலை அந்த ஹோட்டலிலிருந்து நேராகச் செல்லும் ரஸ்தாவின் கோடியிலுள்ள ஒரு 'பார்க்'கிற்குச் சென்றார்கள். அங்கே வங்காளிகள் ஆடவரும், பெண்டிரும், குழந்தைகளும் அங்கங்கே தத்தமக்குப் பிடித்த இடங்களில் உட்கார்ந்து கொண்டிருந்தார்கள். ராஜசேகரன் ஒரு சோபாவில் உட்கார்ந்திருந்தான். பிறகு அவன் பக்கத்தில் சுமார் ஐம்பது வயதுடைய ஒரு பெரியவர் வந்து உட்கார்ந்தார். அவர் ஹிந்தியில் வெயிலின் கொடுமையைப்பற்றிமுறையிட்டார். ராஜசேகரன் ஹிந்தியில் தனக்குத் தெரிந்த சில சொற்றொடர்களைக் கொண்டு அவர் கூறியதை ஆமோதித்தான். பிறகு ஒருவரைப்பற்றி ஒருவர் விசாரித்தார்கள். இதன் நடுவில் அவர்கள் சம்பாஷணை தமிழில் நடக்கவாரம்பித்தது. கடைசியில் அப்பெரியவர் ராஜசேகரனை தம் வீட்டில் உணவு கொள்ளுமாறு வேண்டிக்கொண்டார். ராஜசேகரனும் இணங்கினான்.

அவ் வங்காளியின் வீடு ஒரு பெரிய மாளிகை. அது பல ஹால்களை உட்கொண்டது. ராஜசேகரனும் வங்காளியும் உணவுகொண்டு ஒரு ஹாலில் உட்கார்ந்து பேசிக்கொண்டிருந்தார்கள். ராஜசேகரன் அந்த ஹாலில் மாட்டப்பட்டிருந்த படங்களைப் பார்த்துக்கொண்டிருந்தவன் திடுக்கிட்டு எழுந்தான். வங்காளி எழுந்து 'என்ன' வென்று வினவினார். ராஜசேகரன் ஒரு யுவதியின் படத்தைக் காண்பித்து 'அது யாருடையது?' என்று கேட்டான். அவர் பேசாது தன் சோபாவில் போய் உட்கார்ந்தார். சற்றுநேரம் அந்த ஹாலில் அமைதி நிலவிற்று.

பிறகு வங்காளி ராஜசேகரனை நோக்கி, 'நண்பரே, உமது நடப்பிலிருந்து நீர் அந்தப் படத்திலுள்ளவளை அறிவீர் என்று நினைக்கிறேன். அப்படத்தின் தொடர்பு என் வாழ்க்கையில் பெரும் பகுதியை உட்கொண்டுவிட்டது. என் தந்தை திருநெல்வேலியைச் சேர்ந்தவர். அவர் உத்தியோக மாற்றத்தில் இவ்வூருக்கு வந்து சேர்ந்தார். ஆனால் நான் என் [illegible]மையெல்லாம் தென்னா[illegible]லேயே கழித்தேன். நான் சென்னையில் வாசித்துக் கொண்டிருக்கும்போது இப்படத்திலுள்ள யுவதியைச் சந்தித்தேன். அவளும் என்னோடு வாசித்துக் கொண்டிருந்தாள். எங்களுடே அன்பு நிகழ்ந்தது. அதுகாதலாக மாறிற்று. அதன் குறியும் வெளியாயிற்று. அவள் என்னை மணக்கும்படி வற்புறுத்தினாள். நான் என் தந்தைக்குக் கடிதம் எழுதினேன். நான் முதலியார் வகுப்பைச் சேர்ந்தவன். அவள் கள்ளர் வகுப்பைச் சேர்ந்தவள். என் தந்தை இவ்விவாகத்திற்குச் சம்மதிக்கவில்லை. நான் அச்சமயம் என் தந்தையின் வார்த்தையைத் தள்ள அசக்தனாயிருந்தேன். நான் அவளை விவாகமன்னியில் எப்பொழுதும் என்னுடனேயே விருக்கும்படி கேட்டுக்கொண்டேன். அவள் அவ்வார்த்தையைக் கேட்க நாகம்போல் சீறினாள். என்னைப் பல பல பேசி வெளியேறினாள். மறு நாளே அவள் இறந்து போனதாக பத்திரிகையின் மூல மறிந்தேன். அன்றே எனக்கு வாழ்க்கையில் வெறுப்பேற்பட்டது. ஆனால் மீண்டும் ஒரு வருடத்திற்கெல்லாம் என் தந்தை எனக்கு வேறொரு பெண்ணை மணம் முடித்து வைத்தார். அவள் ஒரு பெண் மகவை ஈன்று இறந்தாள். அப்பெண் மகவும் காணாமற் போயிற்று. இருப்பினும் எனக்கு அவளை எப்பொழுதாவது காண்பேன் என்னும் நம்பிக்கை மட்டில் இருந்துகொண்டிருக்கிறது. ஒரு மாதத்திற்குமுன் என்னை ஒருவன் கத்தியால் குத்த முயன்றபோதுதான் நான் எனக்கு யாரோ எதிரி இருக்கிறான் என்பதை உணர்ந்தேன். எனக்கு இறப்பதில் சற்றேனும் கசப்பில்லை. ஆகையால் என் ஆஸ்தியெல்லாம் என் மகள் பேருக்கு உயில் எழுதி வைத்திருக்கிறேன். அவள் அகப்படாவிடில் யாவும் அநாதாவு குழந்தைகளுக்குப் பிரயோஜனப்படும்படி ஏற்பாடு செய்திருக்கிறேன் என்று தன் ஜீவியக் கதையைக் கூறினார்.

ராஜசேகரன் அப்பொழுதே ரகுபதி தேவர் கூறிய வார்த்தைகளின் பொருளை உணர்ந்தான். அவ் வங்காளியிடம் சுருக்கமாக விஷயத்தைக் கூறினான். பிறகு அவரை மகளைப் பார்க்கலாமென்று அழைத்தான். பிறகு இருவரும் மீண்டும் மலையாளம் வந்து சேர்ந்தார்கள். அன்று இரவு புறப்பட்டு ரகுபதி தேவர் வீட்டை நோக்கி நடந்தார்கள். வீட்டை நெருங்கியவுடன் இருவரும் ஒரு மரத்தடியில் பதுங்கிக் கொண்டார்கள். பனி சொட்டிக் கொண்டிருந்தது. மின்மினிப் பூச்சிகள் எங்கும் பிரகாசித்துக்கொண்டிருந்தன. ரகுபதி தேவர் வீட்டில் விளக்கொளி அணைந்தது. இருவரும் தம் மறைவிடத்திலிருந்து புறப்பட்டு தேவர் தோட்டத்தை அடைந்தனர். ராஜசேகரன் வங்காளியைத் தோட்டத்தில் நிறுத்திவிட்டு ஜெயாவின் அறைக்குள் நுழைந்தான். மெள்ள அவளைத் தட்டி எழுப்பினான். அவள் திடுக்கிட்டு எழுந்தாள். ராஜசேகரன் 'உன் உண்மைத் தந்தை வெளியே காத்துக்கொண்டிருக்கிறார். வா, சீக்கிரம், என்றான். அவள் ஆவலோடு அவனோடு வெளியே ஓடினாள். ஒரு குரல் 'கண்ணே, ஜயா! என்று கூறி முனகிற்று. மற்றோர் குரல் 'ஜகதா! இதோ ஒழித்தேன். உன் ஆத்மா சாந்தியடையட்டும்' என்று கணீரென்று ஒலித்தது, வங்காளி 'ஐயோ'வென்று அலறிக் கொண்டு கீழே விழுந்தார். ஜயா 'கிரீச்' என்று கத்திக் கொண்டு ராஜசேகரன் மார்பின் மேல் சாய்ந்தாள். ரகுபதி தேவர் மீண்டும் தம் கட்டாரியைக்கையால் பிடித்த வண்ணமே நிற்பதைக் கண்ட ராஜசேகரன், கையிலிருந்து அதைப் பிடுங்க அவர் கரத்தைப் பிடித்தான். அவரும் பொத்தென்று கீழே விழுந்தார்.

ஜயா தன் உண்மைத்தந்தையும் வளர்ப்புத்தந்தையும் ஒரே சமயத்தில் மாண்டொழிந்ததை எண்ணி வருந்தினாள். ராஜசேகரன் தேற்றத் தெளிந்தாள். அன்றிரவே ராஜசேகரனும் ஜயாவும் ஒருவர்க்கொருவர் வற்ற துணையானார்கள்.

* * * *



தகப்பனார்:—மழை காலத்தில் குளிரில் வெளியே என் படுத்துக்கொண்டிருக்கிறாய்?

பிள்ளை:—எனக்குக் குளிராகவிருந்தால் வரப்போகும் பரீக்ஷையைப்பற்றி நினைத்துக் கொண்டால் குளிர் போய் ஜ்வரம் வந்துவிடுகிறது.

* * * *

உபாத்தியாயர்:— உன்னிடம் இரண்டு பிஸ்கோத்துகள் இருந்து உன் தாய் இன்னும் இரண்டு பிஸ்கோத்துகள் கொடுத்தால் மொத்தம் உன்னிடம் எவ்வளவு இருக்கும்?

சிறுவன்:—நான் சாப்பிடுவதற்குச் சரியாக இருக்கும்.

* * * *

இரு நண்பர்கள் இனி கள் குடிப்பதில்லை என்று தீர்மானித்தார்கள். ஆயினும் நெடு நாள் பழக்கத்திலிருந்து திடீரென விட்டுவிட்டால் வியாதி வந்தால் அதை மருந்தாக உபயோகிக்கவேண்டுமென்று ஒரு பாட்டிலில் கள் வைத்திருந்தார்கள்.

இரண்டு நாள் கழித்து முதல் நண்பன்:—எனக்கு இன்று உடம்பு சரியாயில்லை. அந்தப் பாட்டிலை எடு.

இரண்டாவது நண்பன்:—காலதாமதமேற்பட்டுவிட்டது. நேற்றுமுதலே எனக்கு உடம்பு சௌகரியமில்லை. ஆகையால் அதை நான் மருந்தாக உபயோகித்துவிட்டேன்.

* * * *

கடைக்காரன், "உங்கள் பையன் என்று காலை வந்த ஆஸ்திரேலிய ஆப்பிள்களில் இரண்டைத் தின்றுவிட்டான்" என்று கோபமாகக் கூறினான்.

தகப்பன் (சாந்தமாக):—நிஜமான ஆஸ்திரேலிய ஆப்பிள்களா?

கடைக்காரன்:—ஆமாம்.

தகப்பன்:— அப்படியானால் அவனுக்கு உடம்பு அசௌகரியம் ஒன்றும் ஏற்படாது. நீங்கள் கவலைப்படவேண்டாம்.

* * * *

கூட்டு வியாபாரம் செய்யும் இருவர் ஒருவர்மீதொருவர் சந்தேகப் பட்டுக்கொண்டிருந்தனர். அவர்கள் ஒரு நாள் திருட்டு சம்பந்தமான ஒரு படத்தைப் பார்த்துக்கொண்டிருக்கையில் ஒருவர் "நான் கடையிலிருந்து வரும்போது பெட்டியைப் பூட்டாமல் வந்துவிட்டேனே" என்றார்.

இரண்டாவது வியாபாரி:—அதற்காகக் கவலைப்படவேண்டாம். நான்தான் இங்கு இருக்கிறேனே.



இது ஒரு புதிய புஷ்பமல்ல! தேனீக்கள் ஒரு செடியை மொய்த்துக் கொண்டிருக்கின்றன. ஆஸ்திரேலியாவில் ஒரு அமெச்சூர் படம் பிடிப்பவரால் எடுக்கப்பட்ட படம்.

ஸைகிளை வெளியே வைத்துவிட்டு எதற்காக டிக்கட் வாங்கிக்கொண்டு கோபுவும் அவன் ஸ்நேகிதனும் ஸினிமாவுக்குச் சென்றனர். காட்சி முடிந்த பிறகு வெளியே வந்த கோபு டிக்கெட்டைக் கொடுத்து ஸைகிளை வாங்கிக் கொண்டு அவனுக்கு எட்டணாக் கொடுத்தான்.

அவன் ஸ்நேகிதன்:—கோபு என் அவனுக்கு எட்டணாக் கொடுத்தாய்?

கோபு:—ஸைகிள் புத்தப் புதியது அல்லவா?

* * * *

தகப்பனார் தன்னறையிலிருந்து பிள்ளையை 'கிருஷ்ணா, கிருஷ்ணா' என்று கூப்பிட்டார். கால் மணியாகக் கூப்பிட்டும் பதில் இல்லாது போகவே, வெளியே வந்து பார்க்க கிருஷ்ணன் இருந்தான்.

தகப்பனார்:—வண்டா, இத்தனை நாழியாகக் கூப்பிட்டேனே, காதில் விழவில்லையா.

கிருஷ்ணன்:—நீங்கள் ஏதாவது சொன்னால் பதில் பேசக் கூடாதென்று நேற்று சொன்னீர்களே. அதனால்தான் பதில் பேசாமல் இருந்தேன்.

* * *

கனவான்:—என்ன, நகை செய்தாகிவிட்டதா?

தட்டான்:—இல்லை. இன்னும் முடியவில்லை.

"நேற்று ராத்திரி முழுதும் வேலை செய்து முடித்துவிடுவதாகச் சொன்னாயே?"

"ஆமாம். ஆனால் வேலை செய்யவில்லை"

* * *

கட்டடம் கட்ட வேண்டிய முறைகளைப்பற்றி ஒரு நிபுணர் பிரசங்கம் செய்துகொண்டிருந்தார். மத்தியில் ஒரு விஷமி எழுந்திருந்து "மாட்டுக்கொட்டகையை எப்படிக் கட்டுவது" என்று கேட்டாள்.

நிபுணர்:—ஏன்? நீ அங்கு குடிப்போகப் போகிறாயா?

* * * *

நமது தொடர் கதை

# கரும்பூதம்

## அல்லது

# கள்வனைக் காதலித்த காரிகை

[திருச்சி ஸ்ரீமான் கே வி. எஸ். வாஸ் பி. ஏ., (ஆனர்ஸ்) எழுதியது.]

முன் கதைச் சுருக்கம்.

பாஸ்கரம் பிரபு விஜயபுரியில் மிகுந்த செல்வவந்தர். அவருக்கு, கமலா, ஹேமாவதி என்ற இரு பெண்களுண்டு. மூத்தவளான கமலாவுக்கும் குணசீலம் பிரபுவின் ஒரே குமாரன்

ஜயந்தனுக்கும் பீஜப்பூர் கிராமத்திலுள்ள மாளிகையில் விவாகம் நடைபெறப்போகிறது. பாஸ்கரம்பிரபு விவாகத்திற்கான நகைகளை எல்லாம் விஜயபுரியிலுள்ள தமது "மன்மத விலாஸ" மாளிகையில் வைத்திருக்கிறார். துப்பறியும் இலாகா போலீஸ் கமிஷனர்

துளஸிதாஸ் நகைகளைப் பாதுகாத்து வருகிறார். ஆனால்,

கரும்பூதம் பாஸ்கரம் பிரபுவைப்போல் நடித்து மன்மத விலாசத்திற்கு வந்து வைரமாலையைக் கவர்ந்து செல்லுகிறான். கரும்பூதத்தின் செயல்கள் ஒரு மர்மப் பெண்ணிற்குத் தெரிந்துவிடுகிறது. அவள் டெலிபோனில் கரும்பூதத்துடன் பேசுகிறாள். டெலிபோன் மாதின் வேண்டுகோள்படி கரும்பூதம் தான கவர்ந்து வந்த நவரத்ன மாலையை பாஸ்கரம் பிரபுவின் வீட்டிலேயே மறுபடியும் கொண்டுபோய் [illegible]டுகிறான். பாஸ்கரம் பிரபுவின குமாரியின் தி[illegible]ப் பெரிய விருந்தொன்று நடந்தது. அதில்,

சுதர்சனம் பிரபு, அவரது சகோதரி,

நளினம், பாஸ்கரம் பிரபு, துளஸிதாஸ் முதலியோர்கரும்பூதத்தைப்பற்றிப் பேசிக்கொண்டிருக்கையில் சுதர்சனர் தம் வீட்டிலிருந்து அவன் களவாடிவிட்டால் மாதர் மறுமண சகாயசங்கத்திற்கு ரூ. 50,000 நன்கொடையளிப்பதாகச் சொல்லுகிறார். அன்றிரவு டெலிபோன் பெண் கரும்பூதத்தையழைத்து தான் கரும்பூதமெழுதியதுபோல் சுதர்சனம் பிரபுவிற்கு அவர் வீட்டில் ஒரு குறிப்பிட்ட தினத்தில் கொள்ளையடிக்க வரப்போவதாகக் கடிதமெழுதி விட்டதாகச்சொல்லி அதன்படியே நடக்கவேண்டுமென்று சொல்லுகிறாள். மேற்படி கடிதம் சுதர்சனம் பிரபுவிற்குக் கிடைக்கிறது. சுதர்சனம் பிரபு தன் மின்சாரத் தொழிற்சாலையின் உதவியால் தன் வீட்டிற்குள் ஒருவரும் நுழைய முடியாத ஏற்பாடுகள் செய்கிறார். அவர் கரும்பூதம் திருட வருவதாக எழுதியுள்ள தினத்தன்று பாஸ்கரம் பிரபுவையும் துளஸிதாஸையும் வரும்படி அழைக்கிறார். குறிப்பிட்ட தின இரவில் மாளிகையில் யாரோ நுழைவது மின்சார விசைமூலம் சுதர்சனம் பிரபுவிற்குத் தெரிகிறது. அவரும் பாஸ்கரம் பிரபு துளஸிதாஸுடன் கரும்பூதம் வந்துவிட்டதாக நினைத்து அங்கு செல்லுகிறார். ஆனால் அவன் கரும்பூதமல்ல; கருப்பண்ணன் என்ற திருடன்.

சிறிது நேரத்திற்கெல்லாம் கரும்பூதம் அங்கு தோன்றி அங்கிருந்த பிரபுக்கள் முன்பாகவே சில தஸ்தாவேஜிகளை எடுத்துச் செல்லுகிறான். அன்றிரவு வீட்டிற்குச் சென்றதும் தன சுய சரிதையைப் பற்றி நினைக்கிறான். இதனால் அவனுக்கு மன அமைதியேற்படவில்லை. ஆகையால் திடுக்கிடத்தக்க ஏதாவது ஒரு காரியத்தைச் செய்ய வேண்டுமென்று நினைத்து துப்பறியும் துளஸிதாஸ் வீட்டிற்குச் சென்று அவரைத் தூக்கத்திலிருந்து எழுப்புகிறான். அவர் மிகுந்த கலவரமடைகிறார்.

"நண்பரே! நீங்கள் என்னையும் எனது நடவடிக்கைகளையும்பற்றிப் புகழ்ந்துரைக்கும் கோஷ்டியைச் சேர்ந்தவரென்பது நன்றாகத் தெரியும். எனினும், தற்பாதுகாப்பின் பொருட்டு நான் துப்பாக்கியுடன் வந்திருக்கிறேன். நீங்கள் என்னைக் கைது செய்யவோ அல்லது சுட்டுவிடவோ முயற்சித்தால் விபரீத சம்பவங்களேற்படக் கூடுமென்பதை முன்னதாகவே எச்சரிக்கை செய்து விடுகின்றேன்!" என்று ஆரம்பித்தான் கரும்பூதம்.

"கரும்பூதம், உன்னுடைய நடவடிக்கைகளொவ்வொன்றும் எனக்குப் பேராச்சர்யத்தையும் பெரு மகிழ்ச்சியையும் கொடுக்கின்றனவேயன்றி வெறுப்பையல்ல. உண்மையைச் சொல்ல வேண்டுமானால், நான் உன்னுடைய சக்தியையும் சாமர்த்தியத்தையும் மனப்பூர்வமாக மெச்சுகின்றேன். உன்னைச் சிறைச்சாலையில் அடைத்துப்பார்க்க வேண்டுமென்ற ஆசை எனக்கு எப்பொழுதுமே ஏற்பட்டது கிடையாது ஆகையால் நீ என்னிடம் கொஞ்சம் கூடப் பயப்படத் தேவையில்லை. துப்பாக்கியைக் கீழே வைத்துவிட்டுத் தைரியமாகப் பேசலாம்!' என்றார் கமிஷனர் துளஸிதாஸ்.

"துளஸிதாஸ்! உங்களுடைய வார்த்தைகளை நான் முற்றிலும் நம்புகின்றேன. நீங்கள் உயிர்போவதாக இருப்பினும் வாக்குத் தவறி நடப்பவரல்லவென்பது எனக்கு நன்றாகத் தெரியும்!" என்று சொல்லித் துப்பாக்கியைக் கீழே வைத்துவிட்டு அறையிலிருந்த நாற்காலியொன்றில் [illegible]ந்தான் கரும்பூதம். துளஸிதாஸும் அவனுக்கு எதிராக இருந்த மற்றொரு நாற்காலியிலமர்ந்தார். அதன் பிறகு "நண்பரே! தங்களிடம் ஒரு முக்கியமான விஷயத்தைப்பற்றிப் பேசுவதற்கு வந்திருக்கிறேன்" என்று ஆரம்பித்தான் கரும்பூதம்.

"ஆம்! நானும் அப்படித்தான் நினைத்தேன். இன்றேல் இந்நேரத்தில் இங்கு நீ வந்திருக்கமாட்டாய்!" என்றார் கமிஷனர் துளஸிதாஸ்.

"ஆம்! வாஸ்தவம்தான்! நண்பரே, சுமார் நான்கைந்து மாதங்களுக்கு முன்னர் சென்னை மவுண்ட்ரோட்டிலிருக்கும் சுகுணவிலாச மாளிகையில் ஒரு கொலை நடந்ததல்லவா? அது உங்களுக்கு ஞாபகமிருக்கின்றதா?" என்று கேட்டான் கரும்பூதம்.

"ஆமாம்! சச்சிதானந்தம் பிரபுவைப்பற்றித்தானே பேசுகின்றீர்கள்? அவர் கொலையுண்ட விஷயம் மறக்கக் கூடியதா?" என்றார் துளஸிதாஸ்.

"துளஸிதாஸரே! இந்தக் கொலை சம்பந்தமாகப் புதிய சில உளவுகள் எனக்குக் கிடைத்திருக்கின்றன. அதாவது நீங்களும் உங்களுடைய சகாக்களும் நினைப்பதைப்போல் சச்சிதானந்தரின் மரணத்திற்குக் காமாக்ஷியென்னும் விலைமாது காரணமானவளல்ல. அவள் நிரபராதி! அவளுக்கு கொலையின் விவரங்களொன்றும் கட்டோடு தெரியாது. இந்தக் குற்றத்தைச் செய்தவர்களே வேரா அவருடைய சூழ்ச்சிகளுக்குக் காமாக்ஷியும் இலக்காகியிருக்கின்றாள்!" என்றான் கரும்பூதம்.

"என்ன விந்தை! நீ சொல்லுவது வாஸ்தவம்தானா?" என்று திகைப்புடன் வினவினார் கமிஷனர். "ஆம்! ஆம்!!" என்று அழுத்தம் திருத்தமாகக் கரும்பூதம் பதிலளிக்கவே, துளஸிதாஸ் சில விநாடிகள் வரையில் மௌனம் சாதித்துவிட்டுப் பிறகு பேசலானார்.

"கரும்பூதம்! உன்னுடைய வார்த்தைகளை என்னால் நம்ப முடியவில்லை. ஏனெனில், நீ சொல்லுவதைப் போல் காமாக்ஷி நிரபராதியாக இருப்பாளானால் அவள் சம்பந்த




அட்வகேட் சிவசுப்ரமண்யம் கைத்துப்பாக்கியுடன் உள்நுழைந்தார். "சபாஷ் கரும்பூதம்! சபாஷ்! உனனுடைய உடையிலிருந்து கரும்பூதமென்று சொல்லப்படும் கள்வன் நீதானென்று நினைக்கிறேன்" என்று ஆரம்பித்தார் அட்வகேட்.

மாகப் போலீஸார் கண்டு பிடித்திருக்கும் விஷயங்களெல்லாம் ஆதாரமற்றவைகளாக இருத்தல் வேண்டும். ஆனால் இதுகாறும் எங்களுக்குக் கிடைத்திருக்கின்ற உளவுகளோ ஆணித்தரமானவைகள். அவைகளைச் சந்தேகிப்பதற்கு கொஞ்சமும் இடமில்லை. காமாக்ஷியெனப்படும் இந்தத் தாஸிக்கும் காலஞ்சென்ற பிரபுவிற்கும் நீண்டகாலமாக நட்பு உண்டென்பது எல்லோருக்கும் பகிரங்கமாகத் தெரிந்த விஷயம். அவர்களிருவருக்கும் சமீபத்தில் மனக்கசப்பு ஏற்பட்டதாகத் தெரிகின்றது. இரண்டாவதாகக் கொலை நடந்த தினத்தன்று காலஞ்சென்றவரைக் கடைசியாகச் சந்தித்தது அவள்தான். மூன்றாவதாகவும் முக்கியமாகவும் மற்றொரு விஷயம் கவனிக்கத் தகுந்தது. அதாவது காலஞ்சென்றவர் எப்பொழுது கொலை செய்யப்பட்டாரோ அந்த நிமிடத்திலிருந்து நாளதுவரையில் காமாக்ஷி தலைமறைவாக இருக்கவேண்டியதேன்? அவள் உண்மையில் ஒன்றையுமறியாதவளாக இருந்தால் பகிரங்கமாக வெளியில் வந்து தனது நிரபாதித்துவத்தை நிலைநிறுத்துவதற்கென்ன? ஊம், காமாக்ஷியைப்பற்றி விசாரிக்கப் போனால் இன்னும் எவ்வளவோ விஷயங்கள் வெளியாகின்றன. சென்னை நகரவாஸிகள் சொல்லுவதிலிருந்து அவள் ஒரு கை தேர்ந்த பேர்வழியாகவே காணப்படுகின்றாள். இந்நிலைமையில் போலீஸ் சிப்பந்திகளெல்லாம் மூளையில்லாதவர்களென்று நீ கூறுவதை நான் எப்படி நம்புவது?" என்றார் கமிஷனர் துளஸிதாஸ்.

"நண்பரே! நீங்களெல்லோரும் அறிவில்லாதவர்களென்றும், நான் ஒருவன்தான் உலகத்திற்கே அதி புத்திசாலியென்றும் சொல்லிக்கொள்ளுவதற்காக இங்கு வரவில்லை!" நான் அட்வகேட் சிவசுப்ரமண்யனின் வீட்டைச் சற்றுமுன் சோதனையிட நேர்ந்தது. அவ்வமயம் காலஞ்சென்ற சச்சிதானந்தம் பிரபுவின் கொலை சம்பந்தமாகச் சில கடிதங்கள் என்னிடம் சிக்கின. அவைகளால் நீங்கள் பயன்பெறக் கூடுமென்று நினைத்து இங்கு வந்தேன். நீங்கள் என்னுடைய குணத்தைப் பூரணமாக அறிந்துகொள்ளாமல் இவ்விதம் பேசுவீர்களெனத் தெரிந்திருந்தால் அயர்ந்து, நித்திரை செய்துகொண்டிருந்த உங்களை எழுப்பியிருக்கவேமாட்டேன். சரி, நான்போய் வருகின்றேன்" என்று சொல்லியெழுந்தான் கரும்பூதம்.

துப்பறி நிபுணர் அவனைத் தடுத்து "நண்பா, கரும்பூதம்! உனக்கு இவ்வளவு சீற்றம் கூடவேகூடாது! எனது வார்த்தைகள் புண்படுத்தக்கூடியவைகளாக இருந்தால் அவைகளை வாபீஸ் வாங்கிக்கொண்டுவிட நான் தயாராக இருக்கின்றேன். நண்பா, உன்னுடைய பேச்சில் எனக்கு எப்பொழுதுமே பூரணமான நம்பிக்கையுண்டு. நீ பொய் சொல்லக்கூடியவனல்ல வென்பதையும் கடந்த ஐந்தாறு வருட அனுபவத்தில் நான் நன்றாக அறிந்திருக்கின்றேன். எனினும், சச்சிதானந்தன் மரணத்தைப் பற்றிச் சற்றுமுன் நீ தெரிவித்தவைகள் என்னைப் பிரமிக்கச் செய்துவிட்டன. ஆகையால்தான் ஆச்சரியத்திலும் அவசரத்திலும் ஏதோ கூறினேன். தயவுசெய்து அதை மறந்துவிடு! கடிதங்களென்று என்னவோ கூறினாயே எவருடைய கடிதங்கள்!" என்று கேட்டார் கமிஷனர்.

கரும்பூதம் மறுபடியும் ஒரு நாற்காலியிலமர்ந்துகொண்டு பின்வருமாறு கூறலானான்:—

"நண்பரே! நான் எந்த விஷயத்தையும் ஒரு முறைக்கு இரு முறையாக யோசிக்காமல் பேசுவது கிடையாது. முதலில் இதை நீங்கள் தெரிந்துகொள்ள வேண்டும். சரி. போனது போகட்டும்; விஷயத்தைச் சொல்லுகிறேன் கேளுங்கள். காலஞ்சென்ற சச்சிதானந்தம் பிரபுவையும் அவருடைய தர்மபத்னியான புனிதவதிச் சீமாட்டியையும் நான் நன்றாக அறிவேன். தாஸி காமாக்ஷியையும் எனக்கு நன்றாகத் தெரியும். சச்சிதானந்தர் ஒரு விசித்திரமான மனிதரென்பதும், அவருக்குப் பெண்பித்தமும் பணப்பித்தமும் வரை கடந்துண்டென்பதும் வெட்ட வெளிச்சமான விஷயங்கள். ஆகையால், அவருக்கும் காமாக்ஷிக்குமிருந்து வந்த கள்ள நட்பை எவரும் நிராகரிக்கமாட்டார்கள். அவர் தமது சொந்த மனைவியாகிய புனிதவதியை அவளுடைய பிறந்தகத்திற்கு விரட்டியதும் காமாக்ஷியிடம் கொண்டிருந்த மோஹத்தினால்தான். நண்பரே! புனிதவதிச் சீமாட்டி பெயருக்குமட்டும் புனிதவதியல்ல. அவள் குணத்திலும் புனிதவதியேயென்பதை நான் அறிவேன். அவள் தனது கணவனைச் சீர்திருத்தம் செய்ய இயன்றவரையில் பிர[illegible]ப் பார்த்தாள். ஆ[illegible]ளுடைய எண்ணம் சித்திபெறவில்லை. பிரபுவின் நடவடிக்கைகள் நாளுக்கு நாள் கேவலமடைந்துகொண்டிருந்தன. அவைகளைக்காணச் சகியாத புனிதவதி பிராணத்தியாகம் செய்துகொண்டுவிட்டாள். இந்த விஷயம் ஒருவருக்கும் தெரியாது. அவளுடைய மரணம் இயற்கையிலேற்பட்டதென்றே எல்லோரும் நினைத்துக்கொண்டிருக்கின்றார்கள்!" என்றான் கரும்பூதம்.

"புனிதவதியைப் பரிசோதனை செய்த டாக்டர் இது விஷயமாக ஒன்றும் பிரஸ்தாபிக்கவில்லையே!" என்று வியப்புடன் வினவினார் கமிஷனர்.

"ஏன் பிரஸ்தாபிப்பார்? பணமென்றால் பத்தும் செய்வர் பாரோர்?" என்ற பழமொழியை நீங்கள் கேட்டதில்லையா? புனிதவதியை எந்த டாக்டர் பரிசோதனை செய்தாரோ அந்த டாக்டரின் மௌனத்தை விபுலானந்தன் விலைகொடுத்து வாங்கிவிட்டான் என்றான் கரும்பூதம்.

"விபுலானந்தன் யார்? புனிதவதியின் சகோதரன்தானே?" என்று கேட்டார் கமிஷனர் துளஸிதாஸ்.

"ஆம்; அவன்தான்! சச்சிதானந்தம் பிரபுவின் மரணத்

திற்கும் விபுலானந்தனே மூல காரணம்.ஏன், என்னை இப்படி விறைத்துப் பார்க்கின்றீர்கள்? தயவுசெய்து நான் சொல்லப் போகும் விஷயங்களைச் சாவதானமாகக் கேளுங்கள். புனிதவதிக்கு கோபுவென்னும் ஓர் ஆண் குழந்தையுண்டு. அந்தக் குழந்தையை விபுலானந்தனே போஷித்து வருகின்றான். சச்சிதானந்தருக்கு ஏராளமான சொத்துக்களிருக்கின்றனவென்பதும், அவைகளெல்லாம் அவருடைய மரணத்திற்குப் பின் கோபுவையே சேர வேண்டுமென்பதும் விபுலானந்தனுக்கு நன்றாகத் தெரியும். பிரபுவின் ஐவேஜி முழுவதும் சுயார்ஜித சொத்து ஆகையால் அவைகளையெல்லாம் வேறு எவருடைய பெயருக்காவது அவர் உயில் எழுதி வைத்து விடுவாரோவென்று விபுலானந்தன் அஞ்சினான். அவனுக்குத் தைரியமளிக்க அட்வகேட் சிவசுப்ராமணியம் வந்து சேர்ந்தான். இருவருமாகச் சேர்ந்து பிரபுவைப் படுகொலை செய்துவிட்டார்கள் இந்த விஷயங்களெல்லாம் உனக்கு எப்படித் தெரியவந்தனவென்று நீங்கள் கேட்பீர்கள். அட்வகேட் சிவசுப்ரமண்யனின் வீட்டிலிருந்து அகப்பட்ட கடிதங்கள் இவைகளையெல்லாம் தெளிவாகப் புலப்படுத்துகின்றன. ஆனால், காமாக்ஷியின் கதிஎன்னவாயிற்றென்பதுமட்டில் தெரியவில்லை. அவளும் இவர்களுடைய சூழ்ச்சிகளுக்கு இரையாகியிருப்பாளென்றே நான் அபிப்பிராயப்படுகின்றேன். எனினும் அவளைப்பற்றி நிச்சயமாக ஒன்றும் என்னல் சொல்லமுடியாது. எதற்கும், இந்தக் கடிதங்களை முதலில் பாருங்கள்!'' என்று சொல்லிக் கையிலிருந்த ஒரு பெரிய கடிதக்கட்டைக் கமிஷனர் துளஸிதாஸிடமளித்தான் கரும்பூதம்.

துப்பறி நிபுணர் துளஸிதாஸ் கரும்பூதமளித்த கடிதக் கட்டைப் பிரித்து ஒவ்வொன்றாகப் படித்துப் பார்த்தார். அவருடைய கண்களில் ஒரு புதிய பிரகாசம் தென்பட்டது. சில நிமிடங்களுக்குப் பின் அவர் கரும்பூதத்தை நன்றியறிதல் நிறைந்த பார்வையுடன் நோக்கினார். "நண்பா, கரும்பூதம்! நீ சட்ட வரம்பிற்கு அப்பாற்பட்டவனென்பது வாஸ்தவமே. எனினும், சச்சிதானந்தரின் கொலை சம்பந்தமாகப் பல உண்மைகளை வெளிப்படுத்தியிருக்கும் உனக்குச் சட்ட இலாகா சிப்பந்திகளெல்லாம் நன்றி பாராட்டக் கடமைப்பட்டிருக்கின்றார்கள். காமாக்ஷி நிரபராதிதானென்பதற்கும், இந்தக் கொலைக்கு . விபுலானந்தனும் அட்வகேட்சிவசுப்ரமண்யனும் தான் அடிப்படையான காரணமென்பதற்கும் என்னிடமளித்துள்ள கடிதங்களே போதிய சான்றாகும். இவைகளை ஆதாரமாகக்கொண்டு சிவசுப்ரமண்யனை நாளைக் காலையே கைது செய்துவிடலாம். ஆனால், நான் அப்படிச் செய்யவிரும்பவில்லை. ஏனெனில், அவனையும் விபுலானந்தனையும் சிறைப்படுத்திவிட்டால், காமாக்ஷி என்ன கதியானாளென்பது கடைசீ வரையில் தெரியாமலே போய்விடும். ஆகையால், நாம் இவர்களுக்குக் கொஞ்சமும் சந்தேகமேற்படாமலிருக்கும்படி நடந்து கொண்டு புலன் விசாரணை செய்யவேண்டும். காமாக்ஷியின் இருப்பிடத்தைக் கண்டு பிடிப்பது இனிச் சுலபமாக முடியுமென்றே நம்புகின்றேன். நண்பா, கரும்பூதம்! இப்பொழுது நீ மற்றொரு காரியம் செய்யவேண்டும். அதாவது, இந்தக் கடிதங்களை மறுபடியும் சிவசுப்பிரமணியனுடைய பெட்டியில் கொண்டுபோய் வைத்துவிடவேண்டும். இன்றேல் அவனுக்குப் போலீஸார் மீது கட்டாயமாகச் சந்தேகமேற்பட்டுவிடும்!'' என்றார் துப்பறி நிபுணர் துளஸிதாஸ்.

கரும்பூதம் தனது கைகெடியாரத்தைப் பார்த்துவிட்டு "ஆம்" நீங்கள் சொல்லுவதும் வாஸ்தவம்தான்; கடிதங்களைக் கொடுங்கள். நான் அவைகளைத் திரும்பவும் இருந்த இடத்திலேயே கொண்டுபோய் வைத்துவிடுகின்றேன். மற்ற விஷயங்களைப்பற்றிப் பிறகு பேசிக்கொள்வோம். இப், பொழுது நாம் அதிகமாகக் காலதாமதம் செய்தால் பொழுது புலர்ந்துவிடும்!'' என்று சொல்லிக் கடிதங்களை வாங்கிக்கொண்டு புறப்பட்டான் கரும்பூதம்.

சில நிமிடங்களுக்குப் பின் நமது கரும்பூதம் அட்வகேட் சிவசுப்ரமண்யத்தின் மாளிகையினுள் மறுபடியும் பிரவேசித்து, அவருடைய கடிதங்களையெல்லாம் முன்போலவே மறுபடியும் ஒழுங்காக வைத்தான். அவன் அறையிலிருந்து வெளிப்பட யத்தனிக்கையில், கதவினருகில் எவரோ நகைக்கும் சப்தம் கேட்டது. கரும்பூதம் கலவரத்தோடு இரண்டடி பின்னால் நகர்ந்தான். அடுத்த வினாடியில் அறையினுள்ள மின்சார விளக்குகளெல்லாம் பற்றிக்கொண்டன. அட்வகேட் சிவசுப்ரமண்யம் கைத்துப்பாக்கியுடன் உள்நுழைந்தார்.

"சபாஷ் கரும்பூதம், சபாஷ்!! உன்னுடைய உடையிலிருந்து கரும்பூதமென்று சொல்லப்படும் கள்வன் நீதானென்று நினைக்கின்றேன்!'' என்று ஆரம்பித்தார் அட்வகேட். அவருடைய கைத்துப்பாக்கி கரும்பூதத்தின் மார்பகத்திற்கு நேராக நீட்டிப் பிடிக்கப்பட்டிருந்தது.

கரும்பூதம் தனது அபாயகரமான நிலைமையை நன்கு உணர்ந்துகொண்டான். சிவசுப்ரமண்யன் கொலைத்தொழிலுக்கும் அஞ்சாதவனென்பது அவனுக்கு நன்றாகத் தெரியும். ஆகையால் மிகுந்த சாமர்த்தியமாக நடந்துகொண்டாலன்றித் தப்ப முடியாதென்பதைக் கரும்பூதம் அறிந்துகொண்டான். அவன் மௌனம் சாதிப்பதைக்கண்ட அட்வகேட் மறுபடியும் பேசலானார். "கரும்பூதம்! உன்னுடைய மௌனத்திலிருந்து கரும்பூதமெனப்படும் கொள்ளைக்காரன் நீதானென்பதை நான் உறுதி

திலோ அல்லது கொலைஞர்களிடத்திலோ கொஞ்சமும் கருணை காட்டக்கூடியவனல்ல. நீ இதை முக்கியமாகத் தெரிந்து கொள்ளவேண்டும்!" என்றார் அட்வகேட்.

"கொள்ளைக்காரர்களிடத்தில் உங்களுக்கு அனுதாபமில்லாதிருக்கலாம்; ஆனால் கொலைஞர்களிடத்திலும் கருணைகாட்டுவதில்லையென்று சொன்னீர்களே; அதை மட்டில் என்னால் நம்ப முடியாது!" என்று பரிகசிப்பதைப்போல் புன்முறுவலுடன் கூறினான் கரும்பூதம். இந்த வார்த்தைகளைக் கேட்ட அட்வகேட்டின் முகம் சவத்தைப்போல் சரேலென்று வெளுத்தது. அவருடைய சரீரம் உச்சி முதல் உள்ளங்கால்வரையில் மயிர்க்கூச்சலிட்டது. இதைக் கரும்பூதம் கவனியாமலில்லை. இரண்டொரு நிமிடங்கள்வரையில் இருவரும் மௌனம் சாதித்தார்கள். பிறகு அட்வகேட் சிவசுப்ரமண்யன் தன்னை ஒருவாறாகத் திடப்படுத்திக்கொண்டு "கரும்பூதம், முதலாவதாக உன்னை ஒரு கேள்வி கேட்க விரும்புகின்றேன். அதாவது நீ எனது கடிதங்களையோ அல்லது தினசரிக் குறிப்புப் புத்தகத்தையோ பார்த்தாயா?" என்றார்.

"இல்லை!" என்று ஒரே வார்த்தையில் பதிலளித்தான் கரும்பூதம். அவனுடைய மனதில் துப்பறியும் துளஸிதாஸ் சொல்லியனுப்பிய விஷயங்கள் இப்பொழுதுதான் ஞாபகத்திற்கு வந்தன. "அடடா, நாம் பெருந் தவறையல்லவா செய்துவிட்டோம். இந்தக் கடிதத்தைப் பிறர் பார்வையிட்டதாக சிவசுப்ரமண்யம் அறிந்து கொள்ளக்கூடாதென்றும் அப்படியறிந்து கொண்டுவிட்டால் அவன் மிகுந்த எச்சரிக்கையுடனிருக்கத் தலைப்படுவானென்றும் அதற்குப் பிறகு காமாக்ஷியைக் கண்டுபிடிப்பது கஷ்டமாகிவிடுமென்றும் துப்பறி நிபுணர் துளஸிதாஸ் கூறினார். அவருடைய அபிப்பிராயத்திற்கிணங்கக் கடிதங்களையெல்லாம் இருந்த இடத்தி[illegible] வைத்துவிட[illegible]க்கத்து [illegible]க ஒருக்காலும் நாம் திரும்பமுடியாது. சிவசுப்ரமண்யம் சாதாரணமான பேர்வழியன்று. தவிர, ஒரு பெரிய கொலைக் குற்றத்திற்கு அவன் உடந்தையாக இருக்கின்றான். ஆகையால், தற்பாதுகாப்பின் பொருட்டு அவன் எதையும் செய்யத் துணிந்துவிடுவான். ஒரு கொலை செய்தவனுக்கு மற்றொரு கொலை செய்வது ஓர் பிரமாதமான விஷயமல்ல. நான் இனி சாதுர்யமாகப்பேச வேண்டும். கடிதங்களிலொன்றையும் நான் பார்வையிடவில்லையென்று அவனை நம்பும்படிச் செய்யவேண்டும்!"

கரும்பூதம் மேற்கண்டவாறாகத் தனக்குள் எண்ணமிட்டுக்கொண்டிருக்க அட்வகேட் சிவசுப்ரமண்யனின் மூளையும் பலமாக வேலை செய்துகொண்டிருந்தது. இவன் யார்? கரும்பூதமென்று சொல்லப்படும் கொள்ளைக்காரன்தானா அல்லது காலஞ்சென்ற சச்சிதானந்தரின் கொலை விஷயமாகத் துப்பு துலக்கும் போலீஸ் உத்தியோகஸ்தனா? போலீஸ் உத்தியோகஸ்தனாக இருந்தால் இவனை இலேசில் விடக்கூடாது. ஏனெனில், என்னுடைய பிரத்யேகக் கடிதங்களையெல்லாம் இவன் கட்டாயமாகப் பார்வையிட்டிருப்பான். சில தினங்களுக்கு முன்னர் நமது மாளிகையை எவனோ ஒருவன் வட்டமிட்டுக்கொண்டிருந்தானென்று வேலையாள் கூறினான். அப்பொழுதே எனக்குக் கலவரமுண்டாயிற்று. இப்பொழுது அவனுடைய வார்த்தைகளை மறுபடியும் நினைத்துப்பார்த்தால் கரும்பூதத்தைப்போல் நடிக்கும் இம்மனிதன் துப்பறிவோர் காரியாலயத்தைச் சேர்ந்தவனாக இருக்க வேண்டுமென்றே முடிவு செய்ய வேண்டியிருக்கிறது. எதற்கும் இவன் யாரென்பதை முதலில் தெரிந்து கொள்ளவேண்டும். இவன் போலீஸ் சிப்பந்தியாக இல்லாமல் கரும்பூதமாக இருந்தால் நாம் கொஞ்சமும் பயப்படத் தேவையில்லை. ஏனெனில், கரும்பூதத்தை ஒரு பெரிய பிரபுவென்றும், நம்முடனெல்லாம் நெருங்கிப் பழகுகின்றவனென்றும் பத்திரிகைக்காரர்கள் சொல்லுகின்றார்கள். ஆகையால் அவன் தனது பதவியையும் கௌரவத்தையும் காப்பாற்றிக் கொள்ளுவதற்கு கட்டாயமாக விரும்புவான். அவனுடைய உண்மைப் பெயரைத் தெரிந்துகொண்ட பின், "கரும்பூதம்! நீ ஒரு வகையில் குற்றவாளி? நான் ஒரு வகையில் குற்றவாளி; ஆகையால் நாமிருவரும் ஒருவரையொருவர் காட்டிக்கொடாமலிருப்பதே உசிதமானது! என்னுடைய இரகசியங்களை நீ வெளிப்படுத்தினால் உன்னுடைய உண்மைப்பெயரையும், நான் வெளிப்படுத்திவிடுவேன். இறுதியில் இருவருக்கும் தீங்கு நேரிடும்!" என்று பயமுறுத்தி அவனை வசப்படுத்திவிடலாம். அவனுடைய உதவி நமக்குப் பலவகையில் உபயோகமாகவுமிருக்கும். முதலாவதாக நம்மால் கடத்தப்பட்டவளும், இப்பொழுது தப்பிச் சென்று தலைமறைவாக வாழ்கின்றவளுமான காமாக்ஷியை இவன் மூலமாகத் திரும்பவும் சிறைப்படுத்திவிடலாம். சுருங்கக் கூறுங்கால் இவன் கரும்பூதமாக இருப்பின் இனிப் போலீசார்களிடமோ அல்லது துப்பறிவோர்களிடமோ நாம் கொஞ்சமும் அஞ்சத் தேவையில்லை. எல்லோரையும் இவன் ஒருவனை வைத்துக்கொண்டே நாம் சமாளித்துவிடலாம்!" என்றிவ்வாறாகத் தனக்குள் எண்ணமிட்டுக்கொண்டிருந்தான் சிவசுப்ரமண்யன். நான்கைந்து நிமிடங்கள்வரையில் இருவரும் மௌனமாக நின்றார்கள்.

(தொடரும்.)

# த்யாகராஜ கீர்த்தனம்.

[காபிரைட்.]

ஸங்கீதவித்வான் காஞ்சி பி. பி. ஸ்ரீனிவாஸய்யங்கார், பி. ஏ. எழுதியது.

I

பல்லவி

அம்ப! நினு நம்மிதினண்டே நீ—
கனுமானமேமம்ம ? (அம்ப)

அநுபல்லவி

சம்பரவைரி ஜனக ஸஹோதரி
சரணுஜொச்சி மனஸார ஸ்ரீஜக (அம்ப)

சரணங்கள்

1. கீர்வாணகணுதாரி! அம்ப !
சர்வாணி ! அகண்டாகாரி !
பர்வதராஜ மனோக்ஞ குமாரி !
நிர்வாஹமு லேக மதினிகோரி, (அம்ப)

2. ஸுரவைரி கதன சௌர்யே !
வருணாலய காம்பீர்யே !
ஸ்வரஜித கோகில ரவ மாதுர்யே !
பரிதாபமு தாளகனு, ஸுசர்யே ! (அம்ப)

3. சர்மதாயகி ! கௌரி !—துஷ்—
கர்ம கலுஷவன குடாரி !
நிர்மல த்யாகராஜ ஹ்ருத்சாரி !
தர்ம ஸம்வர்த்தனி ! ஓங்காரி ! (அம்ப)

II

| | |
|---|---|
| ஸ்ரீ ஜகதம்ப | —ஸ்ரீ ஜகதம்பிகையே! |
| சம்பரவைரி ஜனக ஸஹோதரி | —மன்மதனுடைய பிதாவான திருமாலின் சகோதரியே! |
| கீர்வாண கண ஆதாரி | —தேவகணங்களுக்கு ஆதாரமானவரே! |
| சர்வாணி | —சர்வாணி என்ற திருநாமம் படைத்தவரே! |
| அகண்டாகாரி | —ஸகல பொருள் |
| பர்வதராஜ மனோக்ஞ குமாரி | —பர்வதராஜனுடைய மனங்களிக்கும்படி தோன்றிய புத்திரியே! |
| ஸுரவைரி கதன சௌர்யே | —அஸுரர்களைக் கொல்லும் மகா சக்தி வாய்ந்தவரே! |
| வருணாலய காம்பீர்யே | —ஸமுத்திரத்தைப் போன்ற கம்பீரமான தோற்றமுடையவரே! |
| ஸ்வரஜித கோகில ரவ மாதுர்யே | —குயிலின் குரலைப் பழித்த மதுரமான சாரீரத்தையுடையவரே! |
| ஸுசர்யே | —ஸன்மார்க்கமாக விளங்குபவரே! |
| சர்மதாயகி | —இன்பத்தை யுண்டாக்குபவரே! |
| கௌரி | —கௌரி! |
| துஷ்கர்ம கலுஷ வனகுடாரி | —தீயச்செய்கைகள் பாபங்கள் முதலியவற்றாலான வனத்திற்குக் கோடரியே! |
| நிர்மல த்யாகராஜ ஹ்ருத்சாரி | —தோஷரஹிதனான தியாகராஜனுடைய ஹ்ருதயத்தில் சஞ்சரிப்பவரே! |
| தர்ம ஸம்வர்த்தனி | —தர்ம ஸம்வர்த்தனித் தாயே! |
| ஓங்காரி | —ப்ரணவ ஸ்வரூபமானவரே! |
| நிர்வாஹமுலேக | —கதியேது மில்லாமல் |
| பரிதாபமு தாளக | —பரிதாபம் தாளமுடியாமல் |
| மதினி கோரி | —மனத்தில் பிரார்த்தித்துக்கொண்டு |
| சரணு ஜொச்சி | —உம்மைச் சரணமடைந்து |
| மனஸார நினு நம்மிதினண்டே | —மனப்பூர்வமாக உம்மையே நம்பியிருக்கிறேன் என்றால் |
| நீகு அனுமானமு ஏமம்ம | —உமக்கு ஸந்தேகம் ஏனம்மா? |

III

திருவையாற்றில் கோயில் கொண்டெழுந்தருளியிருக்கும் ஸ்ரீ தர்மஸம்வர்த்தனி யம்மையைப் பற்றி ஸ்வாமிகள் பாடிய பல கீர்த்தனைகளில் இஃதொன்று.

சம்பர வைரி:—பரம சிவனுருடைய தவத்தைக் கலைக்கச் சென்ற மன்மதனை அவர் நெற்றிக் கண்ணாலெரித்து உருவிலியாக்கிவிட்டார். பின்பு மன்மதன், ஸ்ரீக்ருஷ்ணபரமாத்மாவுக்கு ருக்குமணிப் பிராட்டியினிடம் ப்ரத்யும்னன் என்ற பேருடன் குமாரனாய் ஜனித்தான். அவன் பிற்காலத்தில் தனக்குச் சத்துருவாய்த் தன்னைக் கொன்று விடுவான் என்பதைச் சம்பரன் என்ற அஸுரராஜன் அறிந்திருந்தான். அவன் தன் இஷ்டம்போல் பலவிதமாக உருவத்தை மாற்றிக் கொள்ளும் சக்தியையுடையவனாதலால் எவ்வாறோ கிருஷ்ணபரமாத்மாவின் அரண்மனைக்குள் புகுந்து பத்துதினங்களுக்குட்பட்ட குழந்தையாயிற்றே என்றும் பாராமல் பிரத்யும்னனை ஒருவரும் அறியாதபடி எடுத்துச் சென்று சமுத்திரத்தில் எறிந்துவிட்டு நிர்ப்பயமாய்த் தன் இருப்பிடத்தையடைந்தான்.

ஆனால் விதியின் வன்மையை யாரால் வெல்ல முடியும்? ப்ரத்யும்னனாகிய சிசுவை ஒரு பெரிய மீன் விழுங்கிவிட்டுத் தன் பாட்டிலே கடலில் சஞ்சரித்துக்கொண்டிருந்தது. சம்பராசுரனுடைய ஆட்சிக்குட்பட்ட வலைஞர்கள் சிலர் அதனைப் பிடித்துக் கொண்டு போய் அவனுக்கு அளித்தனர். சம்பராஸுரன் அதைத் தன் சமையற்காரனிடம் கொடுத்துச் சமைக்கச் சொன்னான். சமையற்காரன் அதை அறுத்துப் பார்க்கும்போது அதில் மிக்க தேஜஸுடன் ஒரு குழந்தை யிருந்ததைக் கண்டு பிரமித்துப் போய் அதைப் பாகசாலைத் தலைவியாகிய மாயாவதி என்பவளிடம் கொடுக்க, அவள் அவ்விஷயத்தை யாருக்கும் தெரிவிக்க வேண்டாமென்று கூறித் தானே ரஹஸ்யமாய் அக்குழந்தையை வளர்த்து வாலானாள்.

அந்த மாயாவதி, ரதிதேவியின் அவதாரம். அவள் பூமியில் பிறந்து யுவதியான பின்பு சம்பராஸுரன் அரண்மனையில் வேலைக்கு அமர்ந்தபோது அவளுடைய ஸௌந்தரியத்தைக் கண்டு வியந்த அஸுரன் அவளைத் தனக்கு மனைவியாகும்படிக் கேட்டான். ஆனால் சிலகாலம் கழிக்கட்டுமென்று அவள் கூறினாள். அந்த ஸமயந்தான் மன்மதன் அவதாரமான ப்ரத்யும்னனாகிய சிசு அவளுக்குக் கிடைத்தது. அப்போது நாரதமஹாமுனி அவள் முன்னிலையில் தோன்றி அவளுடைய பூர்வோத்தரத்தையும், ப்ரத்யும்னன் வரலாற்றையுங்கூறி, சம்பராஸுரனிடம் தனக்குப் பதினைந்து வருஷகாலம் அனுஷ்டிக்க வேண்டிய விரதம் ஒன்று இருப்பதனால் அதுவரையில் விவாகத்திற்காகப் பொறுத்துக்கொண்டிருக்குமாறு கேட்டுக்கொள்ளும்படி ஒரு உபாயமும் கற்பித்து, அக்காலவரையறை முடிந்தவுடன் ப்ரத்யும்னனைக்கொண்டு அஸுரனைக் கொல்வித்துப் பின்பு அவனை மணம் புரிந்துகொள்ளும்படிக் கட்டளையிட்டு மறைந்தார்.

மாயாவதி அவ்வாறே அஸுரனிடம் கேட்டுக்கொண்டு பதினைந்து வருஷ காலத்தையும் கடத்தினாள். ப்ரத்யும்னன் யௌவனமடைந்தபோது ஒப்பற்ற ரூபலாவண்யமும் தேகபலமும் கூரிய அறிவும் படைத்தவனாய் விளங்கினான். அவன்பால் மாயாவதி தன் காதலையுணர்த்த ப்ரத்யும்னன் திகைப்படைந்தான். அப்போது அவள் அவனுடைய வரலாற்றையும் ருக்மிணிப் பிராட்டி அவன் பிரிவால் துன்பப்படுவதையும் எடுத்துச்சொல்லி, சம்பராஸுரனைக் கொல்வதற்காக அபூர்வ அஸ்திரங்களைப் பிரயோகிக்கும் மஹா மாயா வித்தையைக் கற்பித்தாள். ப்ரத்யும்னன் அவ்வாறே சம்பரனைக் கொன்று, தேவர்களால் பாராட்டப்பட்டு, மாயாவதியுடன் த்வாரகையை அடைந்து, நாரதமஹாமுனிவரால் அங்குள்ளவர்களுக்கு இன்னாரென அறிவிக்கப்பட்டு, மாயாவதியை மணம் புரிந்துகொண்டு வாழ்ந்திருந்தான்—என்ற வரலாறு ஸ்ரீமத்பாகவதம் தசமஸ்கந்தத்தில் 55-வது அத்யாயத்தில் கூறப்பட்டிருக்கிறது.

பர்வத குமாரி:—23-5-37ல் வெளியான 'மித்திரன்' வாரப்பதிப்பு இதழில் 'பராசக்தி' என்ற கீர்த்தனத்தின் குறிப்பைப் பார்க்கவும்.

கௌரி:—அஸுரர்களைக் கொல்லும்பொருட்டுப் பார்வதி தன் கோபத்திலிருந்து எட்டுக் கைகளும், கருநிறமும், கோரத்தன்மையுமுடைய ஒரு ரூபத்தையுண்டாக்கினாரென்றும், அஸுர ஸம்ஹாரத்தின் பிறகு சிவபெருமான் பார்வதியை நோக்கி, "காளி" (கருநிறமுடையவளே) என்று அழைக்க, அதனால் அவர் மனம் வருந்தித் தவமிருந்து வெண்ணிறம் பெற்றுக் 'கௌரி'யானாரென்றும் அவரிடமிருந்து விலக்கப்பட்ட கறுப்புருவம் காளியாயிற்றென்றும் நூல்கள் கூறும்.

துஷ்கர்ம...குடாரி:—'சரசர' என்ற கீர்த்தனத்தில் "தொலிஜேஸின பாவன குடார" என்ற சம்போதனம் வருவதைக் காண்க.

## IV

### ஆரபி ராகம் — ஆதிதாளம்

இந்த ராகம், 72 மேளகர்த்தா முறையின்படி 29 வதான (தீர) சங்கராபரணத்தில் ஜன்யம். கனராகங்களில் ஒன்று. மங்களகரமான தென்று பெரியோர்களால் கருதப்படுகின்றது. க்ரமம்—, ஸரிமபதஸ்—ஸ்நிதபமகரிஸ—சதுச்ருதி ரிஷபம் அந்தர காந்தாரம் சுத்த மத்யமம் சதுச்ருதி தைவதம், காகலிநிஷாதம். இந்த ராகம் பெரும்பாலும் தேவகாந்தாரியைப் போலிருப்பதால் இதை மிகவும் எச்சரிக்கையுடன் பாடவேண்டும். தேவகாந்தாரியில் வழங்கும் 'தநிஸ'—நிஸரீ—மபதா—நிஸ்ரீ' என்பது போன்ற ப்ரயோகங்கள் இதில் வரவேகூடாது. மற்றும் இவ்விராகத்தின் நுண்ணிய அம்சங்கள் இந்த கீர்த்தனாதிகளிலுள்ள விசேஷப் பிரயோகங்களால் அறியவேண்டும்.

#### பல்லவி

| | | | | | | |
|---|---|---|---|---|---|---|
| ; ; ; * | ஸ்ா ஸ்ா; ஸ்ா; தா; | தாபா-பாதபமா | பாமாபா ; | த ; பா ; | மபதபமா , கரீ ; | மா ; |
| ; ; ; * | அம் பா; நி, ...; | னனு-னம்...... | ம்...தி ; | ; னண் ; | டே...... , ... ; | நீ ; |
| பா ; பா * | ஸ்ா ஸ்ா; ஸ்ா; தா; | தாபா-பாதபமா | பாமாபா ; | தா ; பா ; | மபதபமா , கரீ ; | பமகரி |
| ... ; கு * | அம் பா; நி; ...; | னனு-னம்...... | ம்...தி ; | ; னண் ; | டே...... , ... ; | நீ... |
| ஸரிமபதா * | ஸ்ா ஸ்ா; ஸ்ா; தா; | தாபா-பாதபமா | பாமா-பாதஸ் | தாதாபா ; | மபதபமா , கரீ ; | ரிமரிம |
| ......... கு * | அம் பா. நி; ...; | னனு-னம்...... | மி...தி ; | னண் ; | டே...... , ... ; | நீ ... |
| பமபதபத * | ஸ்ா ஸ்ா; ஸ்ா; தா; தாபா-மபதஸ்தஸ்ரிஸ் | | ரீ ;-ஸ்ரிஸ்ஸ் | தாதாபா ; | மபதபமா , கரீ ; | பாமா |
| ...... கு * | அம் பா; நின்; ...; னு-னம்.......... | | மி... ; தி... | னண் ; | டே... ... , ... ; | நீ . |
| தாரீஸா * | ஸா ரீ; மா; காரீ | ஸாதா-ரீஸாரீ | மாபாதாஸ்ா- | தாபாமாகா | ரீ ; ; ; | ; ;-பாமா |
| ............ * | க னு; மா; ... | ன...-மே... | ம......... | ம்......... | மா ; ; ; | ; ; - நீ |
| காரீஸா * | ஸா ரீ; மா; காரீ | ஸாதா-ரீஸரீ | மாபாதாஸ்ா | ஸ்ததபபமமக | ரீ ; ; ; | ஸா- ; ; ; |
| ............ * | க னு; மா; ... | ன...-மே... | ம......... | ம்......... | மா ; ; ; | ; ; ; |

#### அனுபல்லவி

| | | | | | | |
|---|---|---|---|---|---|---|
| ; ; ; * | தா தா; பா; | மபதபமா, கரீ;;-மப | தா ; பா ; | பாமாபாமா | பா ; ; ; | ; ; ; ; |
| ; ; ; * | சம் ப; ர; | வை......, ரி;;- ஜ | ன ; க ; | ஸோ...த | ரீ ; ; ; | ; ; ; ; |
| தபமபாம * | தா தா; பா; | மபதபமா, கரீ;;-மப | தா ; பா ; | பாமாபாமா | பா ; ; | ரிமாரி-மபாம-பத |
| ............ * | சம் ப; ர; | வை......, ரி;;- ஜ | ன ; க ; | ஸோ...த | ரீ ; ;-......... | ......-......-... |
| , ப-மபாம * | தா தா; பா; | மபதபமா, கரீ;;-மப | தா ; பா ; | பாமாபாமா | பா ; ; | ஸரிமரி-ரிமபம-மப |
| , ...-...... * | சம் ப; ர; | வை......, ரி;;- ஜ | ன ; க ; | ஸோ...த | ரீ ; ;-......... | ... -......-... |
| மப-பதஸ்த * | தா தா; பா; மபதஸ் ஸ்ததப-பமமக-ரீமப | | தாபாதா ; | தாஸ்ஸ்தா ; | தாஸ்ாரீ ; ; | ஸரிஸ்-தஸத |
| ...-...... * | சம் ப; ர; வை... ............ரி- ஜ... | | ன. க ; | ஸோ... ; | த ... ரி ; ; | ......:... |
| பதப-மபம * | தா தா; பா; மபதஸ் ஸ்ததப-மகரிஸ ரீமப | | தாபாத ; | தஸ்ஸ்தா ; | ஸ்ரிம்க்ரீ ; ; | ஸ்ரிஸ-தஸத |
| ......-......* | சம் ப; ர; வை... ......-... ரி...ஜ... | | ன...க ; | ஸோ... ; | த ... ரி : ; | ......-... |
| பதப-மபம * | பா பா; மாகாரீ; | ரீ மா பாமாபா; | தாஸ்ாதாதாபா ; | மா ; | காரீ ; | ஸாரீமாபாதா |
| ............ * | ச ர; ஞு ஜொ; | ச் சி ம...ண; | ஸா......... | ர ; ஸ்ரீ ; | ... ; | ஜ.........க |
| ஸ்ா-தஸ்ரீ * | | | | | | |
| ...-...... * | (தம்பா) | | | | | |

#### சரணம்

| | | | | | | |
|---|---|---|---|---|---|---|
| ; ; ; * | பா; பா; பா | தாபாமா;; காரீ; | ; ; | பாமாபாதாதா ; | பா ; பாமா | மாகாரீ ; |
| ; ; ; * | கீ; ர்வா; ண | க...ணு;;......; | ; ; | தா ...... ...ரி ; | அம்...... | பா...... ; |
| ஸாரீமா * | பா; பா; பா | தாபாமா;; காரீ; | ; ; | மாபாதாரீஸ்ா ; | நீதாதாபா | பாமாமாகா |
| ......... * | கீ; ர்வா; ண | க...ணு;;......; | ; ; | தா .........ரி ; | அம்...... | பா...... |
| ரீ; மா * | பா தா ஸ்ா நீதா | தாபாமா; காரீ; | ; ; | மாபாதாரீஸ்ா ; | நீதாதாபா | பாமாமாகா |
| ...;... * | கீ ர் வா ண | க...ணு;......; | ; ; | தா ......ரி ; | அம்.. ... | பா.. ... |
| ரீ; மா * | பா தா ஸ்ா ரீதா | தாபாமா; காரீ; | ; ; | மபதப-பதஸ்த-தஸ்ரிஸ் | ஸ்நிநிததபபம- | பமமககரிரிஸ |
| ...;... * | கீ ர் வா ண | க...ணு;......; | ; ; | தா................ரி... | அம்...... | பா......... |
| ஸாரீமா * | பா தா ஸ்ா நீதா | தாபாமா; காரீ; | ; ; | ரிமபமபத-பதஸ்-தஸ்ரி | ஸ்நிநிததபபம- | பமமககரிரிஸ |
| ......... * | கீ ர் வா ண | க...ணு;......; | ; ; | தா..............ரி... | அம்...... | பா......... |
| ஸாரீமா * | ரீ மாகாரீஸா | ரீமாபாமாபா; பா; | ஸாரீ ; | மாகாரீஸாதா | ரீஸாரீ ; ; | ; ; ; |
| ......... * | ச ர்...வா... | ணி.........; ...; | அகண் ; | டா...கா | ரி... ; ; | ; ; ; |

"பர்வத ராஜ மனோக்ஞ குமாரி — நிர்வாஹ மூலக மதினீகோரி" — இதை அனுபல்லவி போலப் பாடிப் பல்லவி எடுத்து 'அனுமானமேமம்மா' என்று நிறுத்தவேண்டும்.

மற்ற சரணங்களையும் இவ்வாறே பாடுக.

ரேகை சாஸ்திரம்




# சூரிய மேட்டில் ரேகைக் குறிகள்

—:[o]:—

"சக்திதாஸன்"

மோதிர விரலான மூன்றும் விரலுக் கடிப்பாகம் சூரிய மேடாகும். இது கம்பீரமாய் உப்பலாயிருப்பின் சூரிய ஆதிக்கம் பெற்றவரெனக் கருத வேண்டும்.

1. சூரிய மேட்டில் ஒத்தை நீண்ட ரேகை இருந்தால் புகழ், கீர்த்தி, செல்வம் முதலியவைகளைக் குறிக்கும்.

2. இரண்டு ரேகைகள் ஒரே அளவில் காணப்படில், நல்ல அறிவு படைத்திருந்தும் சொல்ப வருமானத்தைக் குறிக்கும். ஒரு ரேகை அழுத்தமாயும், மற்றதுமெல்லியதாயுமிருந்தால் நல்ல லாபத்தைக் குறிக்கும்.

3. சிக்கலான அநேக துண்டு ரேகைகள் நெருங்கியிருந்தால் சித்திர மெழுதுவதில் புத்தி நாட்டத்தைக் குறிக்கும். சித்திர இலக்கணத்துக்கு ஒத்து வராமல் தடைப்படும். பணம் சம்பாதிக்கப் பல பிரவர்த்திகளிலீடுபட்டும் லாபமில்லாததைக் குறிக்கும்.

4. சூரியமேட்டில் புள்ளி காணப்படில், செல்வாக்கும் கீர்த்தியும் நீங்குவதைக் குறிக்கும்.

5. சூரிய மேட்டில் ஒரு ரேகையும் அதற்குமேல் ஒரு கிராசும் இருநதால் ஜெயப்பிரதாபத்தைக் குறிக்கும். மதப்பற்றுடன் நடப்பவர். ரேகையின்றி கிராஸ் மாத்திரமிருந்தால் மத சம்பிரதாயத்தில்பிடிவாதமுள்ளவராயிருப்பர்.

6. சூரிய மேட்டில் ஒரு ரேகையும் அதற்குமேல் ஒரு நக்ஷத்திரக் குறியுமிருந்தால் அபார புத்தியாலும் சிரமப்பட்டுவேலைசெய்ததால் பெரும் புகழும், பொதுவாய் செல்வம் பெருகுவதையும் குறிக்கும்.

7. ஒரு நக்ஷத்திரக் குறியின் கீழ் ஒரு நீண்ட ரேகையும், சில சிறு ரேகைகளும் காணப்படில், பரம்பரையான கீர்த்தியும் அளவற்ற ஐஸ்வரியத்தையும் குறிக்கும். பண்டைக் காலத்தில் இதை கீர்த்தி ரேகைகள் எனச் சொல்லப்பட்டன.

8. ஒரு நக்ஷத்திரக் குறி மாத்திரம் இருந்து, சூரிய மேட்டில் ரேகை காணப்படாவிடில், பல காலம் பட்ட கஷ்டத்துக்குப் பிறகு வரும் கீர்த்தியையும், ஆயுளில் பிற்காலத்தில் வரும் செல்வத்தையும் குறிக்கும்.

9. சூரிய மேட்டில் சதுர ரேகைக் குறியிருந்தால், பேராசையற்ற பிரவிர்த்தியைக் குறிக்கும். அளவற்ற ஐஸ்வரியம் வந்த கால்த்தில், பொருள்மயக்கம் (செல்வச்செறுக்கு) உண்டாகாமல் காப்பாற்றக்கூடியது.

10. வட்ட வளையமான ரேகைக்குறி சூரிய மேட்டில் காணப்படில் பெருங் கீர்த்தியைக் குறிக்கும்.


ஒரு ஓவிய நிபுணரின் கை.

11. சரிவர அமையப் பெருத வளைந்த ரேகைக் குறியுடன் பின்னலான ரேகை காணப்படில், கண்பார்வை மங்கும். கண்நோய் உண்டாகு மென்பதை அறிவிக்கும்.

12. சூரிய மேட்டில் முக்கோணக் குறியிருந்தால், சாஸ்திர ஆராய்ச்சியின் உதவி கொண்டு முன்னேற்ற மடைவதைக் குறிக்கும்.

13. சூரியமேட்டில் வலைக் குறி காணப்படில், அல்ப புத்தியையும், புத்தியின்மையையும் குறிக்கும்.

14. சூலக் குறியிருந்தால் திடீரெனச் செல்வம் சேருவதைக் குறிக்கும்.

கையில் சூரியமேடு ஆதிக்கத்திலிருப்பது ஒரு சிறந்த அமைப்பு. இதைப்பற்றிப்பேசுவதிலோ அல்லது எழுதுவதிலோ உற்சாகமுண்டு. சூரிய ஆதிக்கமுள்ளவர் சில சமயம் மிக்க இரக்கமுள்ளவராயும் மௌனம் சாதிப்பவராயுமிருப்பர். ஆனால் ஒருக்காலும் கெட்டவராகமாட்டார். துர்க்குணங்களை சனியும் புதனும் பங்கிட்டுக்கொள்கின்றனர். சூரிய ஆதிக்கமுள்ளவர் தேக திடம், உற்சாகம், இன்னும் தேஜஸ் ஜொலிக்கும் முகத்தோடு விளங்குவர். பார்ப்பதற்கு கம்பீரத் தோற்றமுள்ளவர். நல்ல அழகான வஸ்துக்களை மிக்க அன்போடு கண்டு மகிழ்வர்.

சனி ஆதிக்க முள்ளவர் பக்கமாய் சூரிய ஆதிக்க முள்ளவர் இருந்தால் சனியாலான சித்தசலனம் நீங்கும். குரு ஆதிக்க முள்ளவர்முன்னேற்றத்துக்கான புதிய யோசனையிலும், சனி ஆதிக்க முள்ளவர் ஜகத்பித்தை யென்ற ஞா[illegible]லோ ழ்ந்தும் இருந்தால் வாழ்க்கையைச் சிறப்புறச் செய்தாராவென பிரச்னையுண்டாகலாம். சூரிய ஆதிக்கமுள்ளவருக்குத் தான் அந்தக் கடமையாகும். பொதுவாய் சூரிய ஆதிக்கமிருந்தால், சித்திர (ஓவிய)க்காரர் அல்லது சங்கீத வித்வான், மகா புத்திமான் என்று சொல்வது வழக்கம். கிரகமேடு சற்றே கம்பீரமாயிருந்து, ஒத்தை ரேகையிருக்குமானால் சிறந்த மேதாவியெனக் கண்டு கொள்ளலாம். அனல் சூர்ய ஆதிக்க முள்ளோரெல்லாம் ஓவியர், நடிகர், சங்கீத வித்வான்களாயிருக்க முடியாது. ஆனால் சூரிய ஆதிக்க முள்ளோர் வாழ்விலுள்ள நடையுடை பாவனைகளிலெல்லாம் சிறப்பை விரும்புவர். அவர்களிடம் இயற்கையாய் அமையப்பெற்ற குணத்தால் சுகபோகங்களை நன்கு அனுபவிப்பர். நல்ல அழகான பொருள்கள் சூரிய ஆதிக்கருக்கே விருப்பந்தரும்.

உலக வாழ்க்கையில் திருப்தியாய் அனுபவித்து சந்தோஷமாயிருப்பவர்கள் சூரிய ஆதிக்கமுள்ளவர்களே. சனி ஆதிக்கருக்கு இப்பிரபஞ்சத்தில் திருப்தியும் சந்தோஷமுமில்லை. இவர்களை ஊக்கப்படுத்தி சந்தோஷப்படுத்தவேண்டுமாயின் விகட கவியைக் கொண்டு முயற்சித்தால் சற்று முகத்தில் சந்தோஷங் காட்டுவார்கள். அதுவும் அசட்டுச் சிரிப்பாகவேயிருக்கும். ஆங்கிலேய தத்துவ ஞானியான பிளேட்டோ என்பவர் எப்பொழுதேனும் சிரித்ததில்லை யென்று சொல்லப்படுகிறது. ஆனால் சூரிய ஆதிக்கர் அகத்தூய்மையால், உடல் [illegible]

இதமாய், அன்புடன் சிரித்து ஆனந்தமாயிருப்பர்.

இவ்வாதிக்கர் தொழிற்றுறையில் இறங்கிவிட்டால் அபாரமாய் வேலை செய்வர். தங்கு தடையற்ற வெற்றியுடன் முன்னேற்றமாகும். இயற்கையான முகவசீகரம், இனிமையான வசனம், கருணைக் கண், எதிர்கொண்டு வருவோரை தன் வயப்படுத்தல், தங்கள் காரியத்தில் கண்ணாயிருந்து சாதித்துக்கொள்ளல் முதலிய நற்குணங்கள் பொலிவுற்றிருக்கின்றன. இவர்கள் வாக்கு சத்யவாசகமாய்ப் பிரகாசிக்கும். இத்தகையோருக்கு சூரியமேட்டில் எவ்வித ரேகையேனும் ரேகைக் குறியேனும் வேண்டுவதில்லை. சூரிய மேடு மாத்திரம் உப்பலாயும், கிரக உச்சத்துக்கான அமைப்பும் இருந்தால் போதுமானது. புத ஆதிக்கம் எவ்வளவுதான் கூர்ந்த புத்தியையும் கவித்திறமையைக் கொடுத்தாலும் சூரிய ஆதிக்கமே அபிவிர்த்திக்குள்ளது.

சூரிய ஆதிக்கமுள்ளவர் பார்ப்பதற்கு கம்பீரத் தோற்றமுள்ளவர். உயரத்தில் குரு, சனி ஆதிக்கர்களில் நடுத்தரமானவர். குரு ஆதிக்கர்போல் சதைப்பற்றும், சனி ஆதிக்கர் போல் ஒத்தை நாடியாயுமிரார். தேகப்பயிற்சி செய்தவர்போல் தசை கெட்டியாய், அங்கங்கள் உருண்டு திரண்டிருக்கும். அகண்ட நெற்றியும் விசாலமான கண்களையுமுடையவர். கண்ணொளி கபடற்ற தன்மையையும், காருண்யம் ததும்பியிருப்பதையும் காட்டும். குழியற்றதும் வட்டவடிவமாய் கன்னங்கள் அமைந்திருக்கும். முகத்துக்கேற்றவாறு மூக்கு நீண்டு அழகுடன் பொருந்தியிருக்கும்.

வாய், உதடு, கண், அருளமைப்பாய் முன்னும் பின்னுமாயிருக்கும். பற்கள் அழகான அமைப்புடன், கெட்டியாயும் வெண்மையாயும் பிரகாசிக்கும். ஈறுகள் சிவந்திருக்கும். நீண்ட கழுத்தும், புஜங்கள் மெலிவுறாமலும், பருமனாயிராமலும் உடலில் நன்கு பொருந்தியிருக்கும். அகண்டமார்பு, தடையற்ற சுவாசம் நல்ல ஆரோக்கியமான ரத்த ஓட்டம் ஆகியவற்றைக் காட்டும். சப்தம் இங்கிதமாயிருக்கும். கடுந்தொனி உண்டாகாது. ஒரே மாதிரியான நிதானமும் கம்பீரமான நடையுமுள்ளவர். சூரிய ஆதிக்கத்துக்கு இது ஒரு முக்கிய அடையாளம். முகத்தில் தேஜஸ் ஜொலிப்பதால், அழகான வஸ்துக்களை நேசிப்பதும், முன்னேற்றத்திலேயே பெருந்தகையான ணமும் இத்தகையோருக்கு இயற்கை என்பதை அறிய வேண்டும். சூரிய மேடு உப்பலாயிருந்து அதில் ரேகையும் காணப்படில் கீர்த்தியையும் செல்வத்தையும் குறிக்கும். சூரிய மேட்டிலுள்ள ரேகை அதிர்ஷ்டத்தைக் குறிப்பதால், அந்தக் கால அளவில் பிரசித்தியும், பொருள் பொங்குவதையும் அறிவிக்கிறது. சூரிய ஆதிக்கமுள்ளோர் விரும்பினாலும் விரும்பாவிடினும், பொருள் தானே பல துறையினின்றும் குவிவதால் லக்ஷ்மி புத்ரனாய் விளங்குவர். செல்வாக்கு நிறைந்த சூரிய ஆதிக்கருக்கு நிறைந்த பொருளும் புகழும் சேராவிடில் வேறு எவருக்கு சேரும்? எனவே சூரிய ஆதிக்கமுள்ளவரே எல்லா வகையிலும் பொருத்தமானவர்.

சூரிய ஆதிக்கமுள்ளவர் நுட்ப அறிவுடையவர். மற்றவர்களைவிட அதி தீவிரமாய் விஷயங்களைத் தெரிந்து கொள்வர். முக்கியமாய் கல்விக் கேள்விகளில் கூரான புத்தியுள்ளவர். எதையும் அறிவதில் சற்றும் சிரமப்படுவதேயில்லை. கண்டது சொற்பமாயினும், அதை விரிவாயெடுத்துரைப்பதில் எவரும் இவருக்கீடாகார். அவர்கள் ஆராய்ச்சி அனுபவம் மிக்க அதியாச்சரியமானது. இதனால் கிரஹிக்குந் தன்மை அதி சூட்சுமமானது. இவர் ஸ்வயமாய் ஒரு பொருளைச் செய்யத்தக்கவர். ஒன்றைப் பார்த்து அதைப் போல் செய்து விடுவதில் மகா சமர்த்தராவர். பழய பொருள்களை நூதன முறையில் புதுப்பித்துவிடுவர். இத்தகையோர் எந்தக் கூட்டத்திலிருந்தபோதிலும் சபாரத்தினமாய் விளங்குவர். சாஸ்திர ஆராய்ச்சி பொருளாராய்ச்சி முதலிய எத்துறையில் புகுந்தாலும் கலந்து ஒத்துழைப்பர். இவர்கள் முன் ஆராய்ச்சி அனுபவமில்லாமலே வைத்தியர், வைதீகர், வக்கீல், முதலானவர்களுடனும், இராஜீய தேசியக் கூட்டத்தார்களுடனும் எல்லாம் தெரிந்தவர்களாய் வேலை செய்வர். அகண்டாகார அறிவே பிரசித்திக்குக் காரணம்.

நூல் ஆராய்ச்சியின்றியே விஷயங்களை தொகுத்துப் பேசுவர். ஆகையால் எல்லா ஜனங்களும் இவர்களை விரும்புவர். எத்தகைய விளையாட்டிலும், தேகப்பயிற்சி, சீட்டு, முதலிய எதிலும் முதன்மையாயிருப்பர். வாழ்வின் எந்தத் துறையிலும் பொருந்தியிருப்பர். அழகான காக்ஷிகள் இவர்கள் கண்களுக்கு ஓர் விருந்து. நல்ல ஆடைகளையும், அழகான ஸ்திரீகளையும் கவனியாதிரார். இன்பகரமான வாழ்வை விரும்புவராதலால் விசாலமான வீடு தோட்டங்களில் இருக்க ஆசைப்படுவர். வீட்டை மிக்க அலங்காரமாய் வைத்திருப்பர். மோதிர விரலின் முதல் அங்குலாஸ்தி நீளமாயிருந்தால் காலத்துக்கேற்ற நாகரீகத்தைப் பின்பற்றுபவராயிருப்பர். மூன்

(29-ம் பக்கம் பார்க்க)

மஹாபாரதம் ஆஸ்வமேதிகபர்வம்

# மருத்தன் கதை

—[*]—

## யுதிஷ்டிரருக்கு வியாஸர் சமாதானம்

பீஷ்மர் இறந்ததனால் மிகுந்த துக்கத்துடன் யுதிஷ்டிரர் அவருக்கான கர்மங்களைக் கங்கையில் செய்து முடித்துத் திரும்பினார். அவரது துக்கத்தைப் பார்த்து, கிருஷ்ணன் அவருக்குப் பலவிதமான ஆறுதல் வார்த்தைகளைச் சொன்னார். பிறகு திருதராஷ்டிரனும் துக்கப்பட வேண்டாமென்று பின்வரும் சமாதான வார்த்தைகளை சொன்னார்:—யுதிஷ்டிர! க்ஷத்திரிய தர்மத்தால் நீ இந்தப் பூமியை ஜயித்தாய். ஆகையால் இதை நீ ஆள வேண்டும். நீ இப்பொழுது துக்கப்படுவதற்குக் காரணமேயில்லை. நானும் காந்தாரியுமே எங்களுடைய குமாரர்களை எல்லாம் இழந்ததால் துக்கப்பட வேண்டியவர்கள். விதுரன் எனக்கு எவ்வளவோ நல்வார்த்தைகள் சொன்னான். துரியோதனன் குற்றத்தால் என் குலமே அழியப்போகிறதென்றும், துரியோதனன் கொல்லப்படவேண்டும் அல்லது கர்ணனும் சகுனியும் அவனைப் பார்க்கக்கூடாது. அப்பொழுதுதான் துரியோதனன் நல்வழிப்படுவானென்றும், அம்மூவரும் சேர்ந்து சூதாடுவதைத் தடுக்கும்படியும, உன்னை அரசனாகச் செய்யும்படியும் விதுரன் சொன்னான். ஆனால நான் துரியோதனனையே அனுசரித்தேன். இப்பொழுது சோகக்கடலில் ஆழ்ந்துவிட்டேன். ஆகையால் நீ துக்கப்படவேண்டாம்.

இவ்வாறு தேற்றப்பட்டும் பீஷ்மர், துரோணர், கர்ணன் முதலியோர் இறந்ததை நினைத்துத் துக்கித்துத் தான் கானகம் போக விருப்பதாகவும் அதற்கு அனுமதி கொடுக்க வேண்டுமென்றும் யுதிஷ்டிரர் கேட்டார்.

இவ்வாறு சொல்லவே வியாஸர் அவரைத் தேற்றிப் பின்வருமாறு சொன்னார்:—நீ க்ஷத்திரிய தர்மங்களை அறிந்திருக்கிறாய். அவர்கள் யுத்தம்செய்து தானே பிழைக்க வேண்டும். அவ்விதம் செய்த நீ மனோவியாதியென்னும் பந்தத்தை அடையத் தக்கவனில்லை. மோக்ஷ தர்மங்களனைத்தையும் நீ உள்ளபடி கேட்டிருக்கிறாய். ஆகையால் காமத்தாலுண்டாகிய மாயையை நீ விலக்க வேண்டும். இந்த அக்ஞானம் உனக்குத் தகுந்ததன்று.

ஒருவரும் தானே ஸ்வாதீனமாயிருந்துகொண்டு தானாகவே காரியத்தைச் செய்கிறதில்லை. ஒரு மனிதன் ஈஸ்வரனால் ஏவப்பட்டு நல்லதும் கெட்டதுமான செய்கையைச் செய்கிறான். பாவத்தைச் செய்த மனிதர்கள் யாகத்தாலும் தவத்தாலும் தானத்தாலும் பரிசுத்தர்களாகின்றனர். தேவர்களும் அஸுரர்களும் புண்யத்திற்காக யாகத்தைச் செய்கின்றனர். ஆகையால் யாகமானது முக்கியமான கதியாகவுள்ளது நீயும் யாகங்களைச் செய்.

இதைக் கேட்ட யுதிஷ்டிரர் தம்மிடம் பொருளில்லையென்று தெரிவிக்கவே, வியாஸரும் மருத்தனுடைய யாகத்தில் பாக்கியாகவுள்ள தனக் குவியல்கள் இமயமலையிலிருப்பதாயும் அதைக் கொண்டு யாகம் செய்யலாமென்றும்கூறி மருத்தன் கதையையும் பின்வருமாறு சொன்னார்:—

தக்ஷரென்னும் ஸ்ருஷ்டி கர்த்தருக்கு அஸுரர்களாகவும் தேவர்களாகவும் பல புத்திரர்களிருந்தார்கள். அங்கிரஸ் என்பவருக்கு பிருஹஸ்பதி ஸம்வர்த்தர் என்ற இரு பிள்ளைகளிருந்தனர். அங்கிரஸின் புத்திரரான இவ்விரு பிள்ளைகளும் எப்பொழுதும் சண்டையிட்டுக் கொண்டிருந்தனர். பிருஹஸ்பதியால் ஸதா துன்பப்படுத்தப்பட்ட இளையவரான ஸம்வர்த்தர் பிறகு திகம்பரராகக் காட்டில் வஸிக்கத் தொடங்கினார்.

இக்காலத்தில் தேவேந்திரன் அஸுரர்களையெல்லாம் கொன்றுவிட்டு, அதன்பின் யாகம் செய்விக்க வேண்டி பிருஹஸ்பதியிடம் சென்று அவரைத் தமக்குக் குருவாக வரும்படி வேண்டினான். பிருஹஸ்பதியும் ஒப்புக்கொண்டு இந்திரனுக்குப் புரோஹிதராக விருந்து வந்தார்.

அப்பொழுது மனு வம்சத்தைச் சேர்ந்த மருத்தன் என்ற ராஜன் பூமியை ஆண்டு வந்தான். அவனுக்கும் இந்திரனுக்கும் எப்பொழுதும் சச்சரவுகள் இருந்துகொண்டிருந்தன. மருத்தன் யாகங்கள் செய்து இந்திர பதவியை அடைந்துவிடக்கூடுமென்று நினைத்த தேவேந்திரன் பிருஹஸ்பதியிடம் சென்று அவர் மருத்தனுக்குக் குருவாக இருக்கக்கூடாதென்று கேட்டுக்கொண்டான். பிருஹஸ்பதியும் தேவேந்திரனுக்குப் புரோஹிதராகவிருந்துவிட்டு மனிதனுக்குத் தாம் குருவாகவிருக்கப் போவதில்லையென்று சொல்லிவிட்டார்.

பிறகு மருத்தன் பிருஹஸ்பதியிடம் சென்று தான் யாகம் செய்ய விரும்புவதாயும், அவர் குருவாகவிருந்து நடத்தி வைக்க வேண்டுமென்றும் கேட்டுக் கொண்டான். ஆனால் பிருஹஸ்பதி இதை மறுத்து விட்டார். இதைக் கேட்டுக் கொண்டு மருத்தன் திரும்பி வருகையில் நாரதர் அவனைக் கண்டு அவன் சோகமடைந்திருப்பதன் காரணத்தைக் கேட்டார். மருத்தனும் பிருஹஸ்பதி தனக்கு யாகம் செய்து வைக்க மறுத்து விட்டதைப்பற்றிச் சொன்னார்.

இதைக் கேட்ட நாரதர் பின் வருமாறு பதில் சொன்னார்:—அரசனே! அங்கிரஸின் மற்றொரு புத்திரரும் பிருஹஸ்பதியின் தம்பியுமான ஸம்வர்த்தர் என்பவர் கானகத்தில் திகம்பராகத் திரிந்துகொண்டிருக்கிறார். அவர் பித்தன் போல் வேஷத்துடன் திரிந்து கொண்டிருக்கிறார். வாராணஸி என்னும் பட்டணத்திற்கு அவர் அடிக்கடி வருவார். நீ அந்தப் பட்டணத்தின் வாயிலில் ஒரு பிணத்தைப் போட்டு வை. அதைக் கண்டு எவர் திரும்புவாரோ அவர் தான் ஸம்வர்த்தர் என்று தெரிந்துகொள். அவர் போகுமிடத்திற்கு அவரைப் பின் தொடர்ந்து சென்று உன் விண்ணப்பத்தைச் செய்துகொள். "என்னை உனக்கு யார் சொன்னான்; அவன் எங்கே?" என்று கேட்டால் நான் சொன்னதாகவும் நான் அக்னியில் பிரவேசித்துவிட்டதாயும் சொல்லிவிடு.

நாரதர் கூறியதைக் கேட்டு அவ்விதமே செய்ய ஸம்வர்த்தர் பிணத்தைக்கண்டு திரும்பினார். மருத்தனும் ஸம்வர்த்தரைப் பின் தொடர்ந்து சென்றான். பிறகு ஸம்வர்த்தர் ஒரு ஆலமரத்தினடியில் போய் உட்கார்ந்தார். மருத்தனும் அவரிடம் சென்று தன் விண்ணப்பத்தைத் தெரிவித்தான். அவர் தன்னைப் பற்றி யார் சொன்னது என்று கேட்டபொழுது நாரதர் கூறியபடியே பதிலளித்தான். பிறகு மருத்தன் தான் பிருஹஸ்பதியிடம் சென்றிருந்ததைப்பற்றியும் தெரிவித்தான்.

ஸம்வர்த்தர், "நீ என் இஷ்டப்படி நடக்கவேண்டும். என்னால் யாகம் செய்விக்கப்படும். உன்மீது பிருஹஸ்பதியும் இந்திரனும் கோபம் கொண்டு பகைப்பார்கள். உனக்குக் கர்மங்களில் நல்ல புத்திஉண்டாக வேண்டும். குறைவற்றதும்உத்தமமான திரவியமிருக்குமிடத்தையும் உனக்குச் சொல்லுகிறேன். அதைக் கொண்டு யாகம்செய்து இந்திரனையும் நீ கீழ்ப்படுத்தக்கூடும். எனக்குப் பணத்திலாவது சிஷ்யர்களிடத்திலாவது விருப்பமில்லை. ஆனால் பிருஹஸ்பதி இந்திரன் இவ்விருவர்களுக்கும் அப்ரியத்தைச் செய்யவே விரும்புகிறேன். உன்னை நிச்சயமாக இந்திரனுக்குச் சமமாகவும் செய்துவிடுகிறேன்" என்று சொன்னார். மருத்தனும் அதற்கு ஒப்புக்கொள்ளவே ஸம்வர்த்தர் தனம் கிடைக்குமிடத்தைச் சொன்னார்.

இமயமலைச் சாரலில் முஞ்சவான் என்ற மலையிருக்கிறது. அதில் மஹாதேவர் எப்பொழுதும் தவம் செய்துகொண்டிருக்கிறார். அங்கு சென்று நீ அவரைப் பக்தியுடன் ஸ்தோத்திரம் செய். பிறகு அவர் தயவால் அந்தப் பர்வதத்தைச் சுற்றியுள்ள ஏராளமான ஸ்வர்ணப்பொடிகளில் வேண்டியதை எடுத்துக்கொள். அதைக்கொண்டு யாகத்தைச் செய்யலாம்.

மருத்தனும் அவ்வாறே முஞ்சவான் என்ற மலைக்குச் சென்று மஹாதேவரைத் துதித்து ஏராளமான தனத்தைப் பெற்று யாகத்திற்கு ஏற்பாடு செய்தான்.

இதையறிந்த பிருஹஸ்பதி மிகுந்த துக்கத்துடனிருந்தார். அப்பொழுது தேவேந்திரன் அவரிடம் சென்றான். பிருஹஸ்பதி சோகமடைந்திருப்பதைக் கண்டு அதன் காரணத்தை வினவினான். அதற்கு பிருஹஸ்பதி மருத்தன் பெரிய தனத்தை யடைந்திருப்பதைச் சொல்லி, அவனை எவ்விதத்திலாவது அடக்கவேண்டுமென்று சொன்னார்.

இந்திரனும் அக்நியை அழைத்து மருத்தனிடம் சென்று பிருஹஸ்பதியை குருவாக வைத்துக்கொண்டுயாகம் செய்யும்படிச் சொல்ல வேண்டுமென்று கூறினான். அவ்வாறே அக்நியும் மருத்தனிடம் சென்று இந்திரன் சொன்னதாக மேற்கூறியபடி சொன்னார். மருத்தனும் தனக்கு ஸம்வர்த்தர் யாகம் செய்விப்பாரென்றும், மகேந்திரனுக்கு யாகம் செய்விக்கும் பிருஹஸ்பதி தனக்கு யாகம் செய்து வைத்தால் அவரது சோபை குறையுமென்றும் ஆகையால் வேண்டாமென்றும் சொல்லிவிட்டான்.

அக்நி இதை இந்திரனிடம் தெரிவிக்கவே, இந்திரன் அக்நியை மறுபடியும் மருத்தனிடம் போகும்படிச் சொன்னான். ஆனால் அக்நி மறுபடியும் செல்லத் தமக்குப் பயமாக இருப்பதாயும், ஸம்வர்த்தர் கோபங்கொண்டு தன்னைச் சபித்துவிடுவாரென்றும், க்ஷத்திரியர்களின் பலத்தைவிட பிராம்மண பலம் மிகப் பெரியதென்றும், பிரம்ம பலத்தைவிட மேலானது ஒன்றுமில்லையென்றும், ஆகையால்தான் ஸம்வர்த்தரிடம்போக விரும்பவில்லையென்றும் தெரிவித்தார். பிறகு இந்திரன் திருதராஷ்டிரன் என்னும் கந்தர்வனை அனுப்பினான். மருத்தனிடம் இந்த முயற்சியும் பிரயோஜனப்படவில்லையாகையால் இந்திரன் மருத்தன் செய்யும் யாகத்தைக் கெடுக்க முயன்றான். ஆனால் ஸம்வர்த்தரின் மந்திரத்திற்குக் கட்டுப்பட்டு இந்திரனும மற்ற தேவர்களும் தாங்கள் நினைத்தபடி செய்ய முடியாமல் அதற்குப் பதிலாக யாகத்தில் ஹவிர்ப்பாகம் முதலியன பெற்று யாகத்தையும் நிறைவேற்றிவைத்தனர்.

வியாஸர் இந்தக் கதையை யுதிஷ்டிரருக்குச் சொல்லி அந்த மருத்தன் செய்த யாகத்தில் மிகுதியான பொருள்களிருப்பதாயும் அதைக்கொண்டு யாகம் செய்யலாமென்றும் சொன்னார். (தொடரும்)

# நாட்டு நடப்பு - சித்திரக் கண்ணாடி



லண்டனில் சமீபத்தில் பஸ் வேலை நிறுத்தம் முடிந்து பஸ்கள் போக்குவரத்து ஆரம்பமான போது லண்டன் பிரிட்ஜ் பஸ் நிற்குமிடத்தில் ஜனங்கள் காத்துக்கொண்டிருந்த காட்சி.



செஞ்சி தாலூகா முதலாவது அரசியல் மகாநாடு சமீபத்தில் நடைபெற்ற போது எடுத்த படம்.



பம்பாய்—கத்தியவார் விமான சர்விஸ் சென்ற வாரம் ஆரம்பமாயிற்று. முதன் முதல் புறப்பட்ட விமானத்தில் பிரயாணிகள் ஏறுவதற்குச் செல்லும் காட்சி.

சிறுவர் பகுதி

# சுத்த வீரன்

———:[*]:———

(என். ஆர். சேஷாச்சாரி)



பழைய காலத்தில் இங்கிலாந்தில் ஏஜில் என்ற ஒரு வேடன் இருந்தான். அவன் கையில் வில்லும் அம்புமாய்க் காட்டுக்குப் போய் வேட்டையாடி ஜீவித்து வந்தான். எப்படிப்பட்ட அவசரத்திலும் குறி தவறாமல் அம்பெய்வதில் அவன் சிறந்தவன். ஆகவே அவனுக்கு "குறி வேடன்" என்ற பெயர் வழங்கலாயிற்று. அக்காலத்திலிருந்த இங்கிலாந்து மன்னனும் ஏஜிலுக்கு தனுர் வித்தையில் இணையில்லாதிருந்தான். பல பேர் ஏஜிலைப் புகழலாயினர்.

அதைக் கேட்ட அரசனுக்கு வேடன் மீது பொறாமை யுண்டாயிற்று. ஏஜிலின் கொட்டத்தை எப்படியாவது அடக்க வேண்டுமென்று தீர்மானித்தான். எளிய வேடனை உடனே அழைத்து வரும்படி சேவகர்களை ஏவினான்.

அவர்கள் ஏஜிலோடு கூட அவனது மகனையும் பிடித்து வந்தனர். காவலன் வேடனைப் பார்த்து, "ஏ வேடா! சிறந்த வில்லாளி யென்று எல்லோரும் உன்னைப் புகழ்வதால் நீ மிக்க கர்வங்கொண்டிருக்கிறாய். என்னைக் குறித்து அலக்ஷியமாகப் பேசுகிறாய். ராஜத்துவேஷிகள் என் தேசத்தில் இருக்கக்கூடாது. ஆகையால் உன்னைக் கொன்று விடுவதாகத் தீர்மானித்தேன். ஆனால் எனது மந்திரிமுதலாயினோர் அதற்கு முன்னதாக உன்னை வில் வித்தையில் பரீக்ஷிக்க அபிப்பிராயப்படுகின்றனர். அதில் நீ ஜயித்தால் உயிர் பெறுவாய். தோற்றால் கொல்லப்படுவாய். இது நிச்சயம்" என்று கடிந்து கூறினான். சுத்த வீரனான வேடனும் சம்மதித்தான்.

"இதோ நிற்கும் உன் மகனைக் கூப்பிடு. தூரத்தில் நிறுத்தி, ஒரு ஆப்பிள் பழத்தை அவன் தலை

இரண்டு துண்டுகளாக ஒரே கணையினால் பிளக்க வேண்டும். தப்பினால் உன் அம்புபட்டு உன் மகன் இறப்பதுமன்றி நீயும் தலை துணிக்கப்படுவாய். இதுதான் பரீக்ஷை. என்ன சொல்லுகிறாய்?" என்று கட்டளையிட்டான் மன்னன்.

அவ்வார்த்தைகள் வேடன் காதுகளில் நாராசம்போல் பாய்ந்தன. என்ன செய்வான் பாவம்! "ஆஹா! என்ன கஷ்ட காலம். குறி மயிரிழை தவறினாலும் எனதருமை மகனை நானே கொன்றவனாவேனே. இம்மானிட இறைவனுக்கு மேல் மறைந்துள்ள மஹா இறைவா! இதுவும் உன் சோதனையோ?" என்று மனங்கசிந்தான்.

தயங்கித் தவிக்கும் தகப்பனைக்கண்டான் தனயன். புலிக்குப் பிறந்தது பூனையாகுமா? "அப்பா! ஏன் மனக்கலக்கம்? இணையற்ற வில்லாளிகளுக்கு இச்சோதனை ஒரு பொருட்டோ? படைத்துக் காத்தழிக்கும் பரம்பொருள் ஒருவரில்லையோ? ராஜாக்ஞையை நிறைவேற்றுங்கள்" என்று வீரதீரத்துடன் விளம்பினான்.

உற்சாக மூண்டது வேடனுக்கு. பிள்ளையை வெகுதூரத்தில் நிறுத்தினான். அவன் சிரசின் மீது ஒரு ஆப்பிளை வைத்தான். கடவுளைக் கருத்தில் கொண்டான். அம்பைத் தொடுத்தான் வில்லில். நாணை இழுத்துக் கண்டோர் வியக்க ஆப்பிள்

பிளந்து தள்ளினான்.

"சபாஷ்! சபாஷ்! மெச்சினேன் உனது வித்தையை. "குறி வேடன்" என்ற பெயர் உனக்கே தகும். நீயும் பிழைத்தாய். உனதரிய மகனும் பிழைத்தான். இனி நாம் பிரிய நண்பர்களாக இருப்போமாக. இது நிற்க, நீ இரண்டு அம்புகளைக் கையிலெடுத்து ஒன்றை எய்துவிட்டு மற்றொன்றைக் கையில் பிடித்திருப்பானேன்?" என்று மகிழ்வுடன் கேட்டான் மன்னவன்.

வேடன் "மஹாப்பிரபு! மக்களைப் பெற்று பாலைச் சொல்லைக் கேட்டு ஆனந்தங் கொண்டுள்ள தாங்கள் எனது ஒரே ஒரு மகவின் மீது மாத்திரம் பச்சாதமில்லாமல் கடுமையான சோதனை விதித்தீர்களே. ஒருவேளை என் குறி தப்பி அவன் மடிந்திருந்தால் அந்த க்ஷணமே உங்களையும் மாய்ப்பதற்காக இரண்டாவது அம்பையும் எடுத்துத் தயாராய் வைத்துக் கொண்டேன். ஆண்டவனருளால் எல்லாம் க்ஷேமமாகவே முடிந்தன" என்று கம்பீரமாய்ப் பகன்றான்.

அரசனுக்கு அப்பொழுது சினமூண்டதாயினும் வேடனுடைய தைரியத்தையும் சாமர்த்தியத்தையும் மெச்சி கோபந் தணிந்தான். ஏராளமான பொருளை வேடனுக்குப் பரிசாக அளித்து அன்று முதல் அவனைத் தன்னுடைய வீர நண்பனாகப் பாராட்டி வந்தான். சுத்த வீரத்தன்மை யாவராலும் மெச்சப்படுமன்றோ?



சென்னை, சூளை வேதவிநாயகர் ரோட் ஆனந்தாஸ்ரமத்திலுள்ள வீர சுப்பையஸ்வாமி சமாதியாலயம். இம்மாதம் 27-ந்தேதி கும்பாபிஷேகம் நடைபெறும்.

# இந்திய வர்த்தமானம்



### பஹிரங்க நிர்வாணத் தடை உத்தரவு

ஷாஜஹான்பூர் நகர மாஜிஸ்திரேட் ஒரு மாத காலத்திற்கு ஜனங்கள் எவரும் தெருக்களில் பஹிரங்கமாக நிர்வாணமாக வரக்கூடாதென கி. பு. கோ. 144-வது பிரிவுப்படி தடையுத்தரவு பிறப்பித்திருக்கிறார் என்று அலஹாபாத்திலிருந்து செய்தி கிடைத்திருக்கிறது. மூன்று வாரங்களாக அங்கு பல நாக சாதுக்கள் முகாமிருப்பதால் இந்த உத்தரவு பிறப்பிக்கப்பட்டிருப்பதாகக் கூறப்படுகிறது.

நாகர்கள் அவதூத சாதுக்களாவார்கள். இவர்கள் வட இந்தியாவில் ஆயிரக்கணக்காக இருக்கிறார்கள். இவர்கள் ஐக்கிய மாகாணத்திலும் பஞ்சாபிலும்தான் ஏராளமாகக் காணப்படுகிறார்கள்.

* * * *

### புதிய அரசியல் கட்சி.

காசியைச் சேர்ந்த சுவாமி கோவிந்தானந்தர், சுபாஷ்போஸ், விநாயக தாமோதர சவார்க்கர், நரிமன் முதலியோருடன் கடிதப் போக்குவரத்து செய்து வருகிறார். இதிலிருந்து தேசிய காங்கிரஸ் சுயேச்சைக் கட்சி என்ற பெயருடன் ஒரு புதிய கட்சி சமீபத்தில் ஸ்தாபிக்கப்படுமென்று தோன்றுகிறது. இது பற்றிப் பத்திரிகைப் பிரதிநிதி சுவாமி கோவிந்தானந்தரைக் கண்டு பேசியபோது அவர் கூறியதாவது:—காங்கிரஸின் சமரஸ முறையில் எங்களுக்கு அலுப்பு ஏற்பட்டுவிட்டது. அரசியல் நெருக்கடி பற்றி மகாத்மாஜி சமீபத்தில் விடுத்த அறிக்கையானது கவர்ன்மெண்டாருடன் காங்கிரஸ் ராஜியாகப் போகக் கொண்டுள்ள கவலையைத்தான் காட்டக்கூடியதாகவிருக்கிறது.

* * * *

### கைதிகள் விடுதலை.

மகுடாபிஷேக ஞாபகார்த்த மன்னிப்பாக சமீபத்தில் விடுவிக்கப்பட்ட கலக, அரசியல் கைதிகளைத் தவிர அந்தமானிலிருந்து 45 கைதிகள் விடுவிக்கப்படுவரெனத் தெரிகிறது.

* * * *

### ஸர்ப்ப விஷம் அரியதோரு மருந்து

கல்கத்தா டம்டம் நகரிலுள்ள தமது ஆராய்ச்சி சாலையில் டாக்டர் ஆர். ஸி. பட்டாசார்ஜீ ஸர்ப்ப விஷத்தைக் குறித்து ஆராய்ச்சி செய்து வருகிறார். அவ்விஷம் புரை நோய்களையும் சில வகைக் குஷ்டங்களையும் தீர்ப்பதாக அவர் கண்டுபிடித்திருக்கிறார். இதை அவர் ஒரு பிரசங்கத்தில் கூறினார் 'வெகு புராதன கால முதல் ஸர்ப்ப விஷம் அரியதொரு மருந்தாக மதிக்கப்பட்டும் உபயோகிக்கப்பட்டும் வந்திருக்கிறது. இதிலிருந்து ஒரு மருந்து எடுக்கப்பட்டால் பலவகைப் பாம்புக்கடி உபத்திரவங்களைத் தீர்க்கலாம். ஆனால் இதில் பல கஷ்டங்களிருக்கின்றன. இப்போது பல பெரிய வியாதிகளுக்குச் சர்ப்பவிஷம் பயன்படுகிறது.

* * * *

### பெண் வேஷத்தில் மணந்த வாலிபன்

சிந்த்வாரா ஜில்லா சில்கா கிராமத்தைச் சேர்ந்த சோடிலால் என்னும் வாலிபன் கைதி செய்யப்பட்டு சப் டிவிஷனல் ஆபீஸர் முன்பு, ஏமாற்றியதாகக் குற்றஞ்சாட்டப்பட்டு விசாரிக்கப்படுவதாக நாகபுரியிலிருந்து செய்தி கிடைத்திருக்கிறது. இவன் சுமார் 55 வயதுள்ள ஜோகியா என்பவரிடம் ஸ்திரீ வேஷம் தரித்துச் சென்று விவாகம் செய்து கொண்டானும். இருபது தினங்கள் இவர்கள் ஒன்றாக வசித்தும் 'மனைவி' 'கணவனை' அணுகவிடவில்லை. ஆகவே குட்டு வெளியாகாதிருந்தது. ஒருநாள் ஜோகியா வெளியே போய்விட்டுத் திரும்புகையில் அவர் 'மனைவி' நகைகளுடன் ஓடிப்போய்விட்ட செய்தி தெரியவந்தது. போலீஸார் எதிரியைத் தேடிப் பிடித்தனர்.

* * * *

### பெங்களூர் சாஸ்திர ஆராய்ச்சிக் கழகத்திலிருந்து ஸர் ஸி. வி. ராமன் விலகுகிறார்

பெங்களூர் சாஸ்திர ஆராய்ச்சி சாலைத் தலைவரான ஸர் ஸி. வி. ராமன் அப்பதவியிலிருந்து விலகிக் கொள்ளத் தீர்மானித்து விட்டார். அவர் ஆராய்ச்சிச்சாலையுடன் எவ்வித உறவும் வைத்துக்கொள்ளப் போவதில்லை. அவருக்கும் நிர்வாக சபைக்கும் சமரச மேற்படவில்லை. சமீபத்தில் மிஸ்டர் பிளவ்டன் தலைமையில் நிர்வாக சபைக் கூட்டம் நடந்தது. ஸர் ஸி. வி. ராமன் குறைந்த சம்பளத்திற்கு நிர்வாக அதிகாரமில்லாமல், ஆசிரியராகவிருப்பதைத் தாங்கள் ஒப்புக்கொள்ளுவதாக நிர்வாக சபையினர் கூறினர். நிர்வாகத்தற்காக ஒரு மத்திய கால டைரெக்டரையும் ரிஜிஸ்திராரையும் நியமிப்பதாகவும் அவர்கள் கூறினர்.

இப்போது தாம் வாங்கும் 3,000 ரூ. சம்பளத்தை ரூ. 2,000 ஆகக் குறைத்துக் கொள்ளத் தாம் தயாராயிருந்தபோதிலும் டைரெக்டர் அதிகாரமில்லாமல் மற்றவருக்குக் கீழ்ப்படிந்து இருக்க முடியாதென்று ஸர் ஸி. வி. ராமன் கூறிவிட்டார்.

நிர்வாகத்தை ரிஜிஸ்திராரொருவரிடம் ஒப்படைத்துவிட்டு இன்னொரு வருஷம் டைரெக்டர் பதவி ஸர் ஸி. வி. ராமனுக்குக் கொடுக்கலாமென்று ராஜப்பிரதிநிதி கூறிய யோசனையை நிர்வாக சபை ஒப்புக்கொள்ளவில்லை. ஸர் ஸி. வி. ராமன் நிபந்தனைகளையும் நிர்வாக சபை அங்கீகரிக்கவில்லை. ஆகவே, அவர் ஆராய்ச்சிச்சாலையுடன் உறவை முறித்துக் கொள்ளுவதென்று முடிவு செய்து விட்டார்.

* * *

## படித்த வேலையற்றோர் உண்ணாவிரதத் தீர்மானம்

வேலையில்லாதவர்களுக்கு வேலை கொடுக்கவோ அல்லது அவர்கள் வயிற்றுக்குச் சாப்பாடு அளிக்கவோ கவர்னர் அல்லது வைஸ்ராய் தங்களது கவனத்தைச் செலுத்தும் பொருட்டு சிம்லா வைஸ்ராய் அல்லது கவர்னர் லாட்ஜமுன் சாகும்வரை உண்ணாவிரதமிருக்கப் போவதாக, பஞ்சாப் படித்த வேலையில்லாதவர் சங்கத்தைச் சார்ந்த சில மெம்பர்கள் உத்தேசித்திருப்பதாக மேற்படி சங்கக் காரியதரிசி ஓரறிக்கை விடுத்திருக்கிறார்.

* * *

## பந்தோபஸ்துக் கைதிகள் பிரச்னை

வங்காளத்திலுள்ள மந்திரி சபையார் பந்தோபஸ்துக் கைதிகளின் பிரச்னை பற்றித் தீவிரமாக ஆலோசித்து வருவதாக நம்பத்தகுந்த விடத்திலிருந்து தகவல் கிடைத்திருக்கிறது. சமீபத்தில் மந்திரிகள் சபை இப்பிரச்னை பற்றிப் பன்முறை கூடி ஆலோசித்ததாகவும் அப்போது இது பற்றிப் பல பிரேரணைகளைக் குறித்து விவாதம் நடந்ததாகவும் தெரிகிறது. அடியிற்கண்ட விடுதலைத் திட்டத்தைப் பற்றியே மந்திரி சபை தீவிரமாக ஆலோசித்ததாக நம்பப்படுகிறது:—

(1) சுமார் 1000 பந்தோபஸ்துக் கைதிகள்வரை நிபந்தனையின்றி விடுதலை செய்யப்படுவர்.

(2) அவர்கள் தகுந்த வேலையைத் தேடிக்கொள்ள இயலுமாறு செய்வதற்காக, அவர்கள் எல்லோருக்கும் ஒரு வருஷ காலத்திற்கு மாதப்படி கொடுக்கப்படும்.

(3) உடனே விடுதலை செய்ய முடியாத பந்தோபஸ்துக் கைதிகள் வெளியிடங்களிலுள்ள சிறைகளிலிருந்தும் முகாம்களிலிருந்தும் வங்காளத்திற்குத் திரும்ப அழைத்து வரப்படுவர். அவர்கள் கல்கத்தாவுக்கருகில் எந்தவிடத்திலாவது சிறை வைக்கப்படுவார்கள். இதன்மூலம் அவர்களது சொந்தக்காரர்கள் அவர்களைச் சௌகரியமாகப் போய் பார்க்க வசதி ஏற்படும்.

* * * *

## அராபியர்-போலீஸார் சண்டை

அலபாபாத் கவர்ன்மெண்டு பொக்கிஷ அராபியக் காவற்காரர்களுக்கும் போலீஸாருக்கும் கடுமையான சண்டை நிகழ்ந்ததன் பயனாக இருதரப்பாரிலும் பலருக்குக் காயமேற்பட்டதென்று ஹைதராபாத்திலிருந்து ஒரு செய்தி கிடைத்திருக்கிறது. சென்ற 29-ந் தேதி 11 அராபியர்கள் உள்ளூரில் நடக்கும் சர்க்கஸுக்குச் சென்றார்களென்றும், தங்களை இலவசமாக உள்ளே விடவேண்டுமென்று அவர்கள் கோரவே, அது மறுக்கப்பட்டதென்றும் சொல்லப்படுகிறது. என்ன மறுத்தும் அவர்கள் பிடிவாதமாக இருந்ததால் சர்க்கஸ் நிர்வாகஸ்தர்கள் போலீஸாரின் உதவியை நாடவேண்டியதாயிற்று. போலீஸாருக்கும் அராபியர்களுக்கும் நிகழ்ந்த சண்டையில் அராபியர்கள் தடிகளையும் கற்களையும் பிரயோகித்தனரென்று சொல்லப்படுகிறது. ஆனால் போலீஸார் தடியடிப் பிரயோகம் செய்து அராபியர்களைக் கடைசியாக அடக்கி அவர்களைக் கைது செய்தனர். இருதரப்பாரிலும் பலருக்குக் காயம். ஒரு போலீஸ் உத்தியோகஸ்தரும், அன்று சர்க்கஸுக்கு வந்திருந்த அலபாபாத் ஸிவில் சர்ஜனும் காயமடைந்தனர்.

* * * *

## சர்க்கஸ் சிங்கத்தின் அட்டஹாஸம்

கல்கத்தாவிலிருந்து 35 மைல் தூரத்திலுள்ள டயமண்டு துறைமுகத்தில் ஒரு சர்க்கஸ் நடந்துகொண்டிருக்கையில் சர்க்கஸ்ஸைச்சேர்ந்த பெரியதொரு சிங்கம் தப்பியோடிவிட்டது. வழியில் அது பக்கத்துக் கிராமத்தைச் சேர்ந்த 50 வயதுள்ள ஒருவரைக் கிழித்துவிட்டது. அவர் அபாயகரமான நிலைமையிலிருக்கிறார்.

* * * *

## சோல்ஜர்களின் அக்கிரமச் செயல்.

பூனாவிலிருந்து 12 மைல் தூரத்திலுள்ள சார்ஹோலி என்றவிடத்தில் பூனா ஜில்லா அரசியல் மகாநாடு நடைபெறுகிறது. இம்மகாநாட்டுக்கு வரும் விசிட்டர்களுக்கு வழி சொல்லுவதற்காக ரஸ்தாவிலிருந்த தொண்டர்கள் கையில் இரண்டு தேசீயக்கொடிகளை வைத்துக்கொண்டிருந்தனர். அவ்வழியே மோட்டாரில் சென்றுகொண்டிருந்த சோல்ஜர்கள் கோஷ்டியொன்று இக்கொடிகளைப் பலாத்காரமாகப் பறித்துக் கொண்டு போய்விட்டது. அதிகாரிகளிடம் இதுபற்றிப்புகார் செய்யப்பட்டிருக்கிறது.

* * * *

# நவயுவன்

அல்லது

# கீதாசாரம்

(பிலிம் கதைச் சுருக்கம்)

பி. ஏ. பட்டமடைந்த ராமு என்னும் யுவன் பட்டம் கிடைத்த பெருமையோடு தன் கிராமத்திற்குப் போகிறான். அங்கு தாயற்ற லக்ஷ்மி என்ற பெண் இவன் வாழ்வில் குறுக்கிடுகிறாள். லக்ஷ்மி தன் தாயை இழந்து தன் தகப்பனோடு அந்த கிராமத்தில் வசித்து வந்தாள். லக்ஷ்மி தன் சங்கீதத்தின் மூலம் ராமுவின் இருதய கமலத்தில் வசிக்கலானாள். அவளிடம் பிரேமை கொண்ட ராமு நல்ல கல்வி ஞானமும், அதனால் விஸ்தரிப்படைந்த இந்த யுவதியே தனக்கு நாயகி என்றெண்ணி காதலிக்கலானான். சில நாட்களுக்குப் பின்பு ராமு, ஐ. ஸி. எஸ். பரீக்ஷைக்குத் தேர்ந்தெடுக்கப்படவே, இங்கிலாந்து போக நேரிடுகிறது. பிரயாணமாவதற்குமுன் தன் தாயாரிடம் மாதர்கள், குடி, தீயவொழுக்கம் இம்மூன்றையும் தன் எண்ணங்களிலிருந்து பகிஷ்கரிப்பதாகப் புனித கீதையின் மேல் பிரமாணம் செய்துவிட்டு இங்கிலாந்துக்குச் செல்லுகிறான்.

ஆனால் இங்கிலாந்தில், அங்கிருக்கும் வாழ்க்கைச் சுழலில் அகப்பட்டுத் தன் தாய்க்குச் செய்த பிரமாணத்தையும் மீறி நடந்து இந்தியாவிற்குத் திரும்பி வரும்போது, வாழ்க்கையை அலக்ஷ்யமாகவும் ஒரு விளையாட்டுப் பொருளாக பாவிக்கும் மனப்பான்மையுடனும் நவநாகரீக வினை பொருளாக வந்து சேருகிறான். இங்கிலாந்தில் தன் படிப்பை அசட்டை செய்து ஐ. ஸி. எஸ். பரிக்ஷையில் தேறாமல், திராக்ஷ ரஸ தாகத்தோடும், ஸ்டாகிங்ஸினால் மூடப்படும் சித்திர பாதங்களின் பிரமையோடும் பாரிஸ்டராய்த் திரும்புகிறான்.

ராமு இங்கிலாந்திலிருந்த போது லக்ஷ்மியின் கற்பை அழிக்க முயன்ற கோபு, லக்ஷ்மி இறந்துவிட்டாளென்று ராமு திரும்பியவுடன் அவனிடம் சொல்லி அவன் மனதில் விஷத்தைப் புகுத்துகிறான். நவநாகரீகத்தில் மூழ்கியிருந்த ராமு தன்னை மறந்து இதர இடங்களில் தன் வலையை வீச ஆரம்பிக்கிறான். வெள்ளித்திரையின் விளைபொருளாகிய சாகஸக்காரி கனகம் கோபுவின் சகாயத்தினால் ராமுவின் வலையில் அகப்படவே, ராமு ஆனந்த வாரிதியில் இருப்பதாய் நினைத்து அச்சுழல் இழுத்த வழியெல்லாம் செல்லலானான். கடன்காரர்களும் இவனை முற்றுகைபோட ஆரம்பித்தார்கள்.

துர்ப்பாக்கியவதி லக்ஷ்மி ராமுவின் வரவையும் அவன் மாறுதல் வாழ்க்கையையும் கேட்டு உள்ளம் நொந்து தன் காதலனை தீய வழியிலிருந்து காப்பாற்றி, அவன்ஜன்மத்தை புனிதப்படுத்த எண்ணி ஆணுடையில் அவனிடம் காரியதரிசியாய் அமர்கிறாள். அவன் வருமானத்திலிருந்து தன் விவேகத்தினால் பணம் சேகரித்துக் கடன்களைத் தீர்த்து, நல்வழியை அடையும்போது கனகம் தன் காரியதரிசியிடம் காதல்கொண்டிருப்பதாய்த் தெரிந்து வெறுப்பும் திகைப்புமடைய வாழ்க்கையின் உத்தம தத்துவங்கள் மனதின்கண் உதிக்கலாயிற்று. அத்தருணம் அவன் தாய் அங்கு வர, லக்ஷ்மியின் மாசற்ற சேவை விளங்கியது. உள்ளங்கள் ஒன்று கூடிப் பரவசத்தை நாடியது.

சங்கீத வன்மைக்குப் பதக்கம் பெற்ற வி. வி. சடகோபன், பி. ஏ. கதாநாயகனாய் நடிக்கிறார். ஸ்ரீமதி டி. பிக்ஷாவதி, கதாநாயகியாய் நடிக்கிறார்.



வின்ஸன்ட் பிக்சர்ஸின் "அந்தே துனியா" என்ற ஹிந்தி பேசும் படத்தில் நடிக்கும் ஸ்ரீமதி ராஜ்குமாரி.



"ப்ரேம்லக்ஷ்" என்ற ஹிந்தி பேசும் படத்தில் நடிக்கும் ஸ்ரீமதி விமலகுமாரி.

**ஜப்பானில் சமீபத்தில் ஒரு 'போலி யுத்தம்' நடைபெற்றது. இதில் ஜப்பானியப்படை அனைத்தும் கலந்துகொண்டன. ஜப்பானின் படை வலிமையைச் சோதிக்கவே நடத்தப்பட்ட இந்தப்போலி யுத்தத்தின் சில காட்சிகள் இங்கு பிரசுரம் செய்யப்படுகின்றன.**



பீரங்கிகள் தயாராக விருக்கின்றன.



டாங்கிகளும் பீரங்கி வண்டிகளும் வரிசையாகச் செல்லுகின்றன.



போர்வீரர்



விஷவாயு முகமூடிகள் அணிந்துகொண்



போர்வீரர்கள் அணிவகுத்து நிற்கின்றனர்.



பீரங்கி வண்டிகள் சுடுவதற்குத் தயாராகவிருக்கின்றன.



...அணிந்துகொண்டுள்ள வீரர்கள் ஒரு பீரங்கியைத் தயார் செய்யும் காட்சி.



யுத்தத்தின் ஒரு காட்சி.

ஸிட்னியில் (ஆஸ்திரேலியா) மாடுகள் ஒரு ஆற்றைக் கடக்கும் காட்சி.

ஆஸ்திரேலியா நியூ ஸவுத்வேல்ஸ் மாகாணத்தில் ஒரு ஆட்டு மந்தை ஓட்டிச் செல்லப்படும் காட்சி.



வட துருவத்திற்குச்சென்ற ரஷ்யவிமானிகள். அங்கு ஒரு பெரிய பனிக் கட்டிமீது இவர்கள் ஸோவியத் கொடியை நாட்டிவிட்டுத் திரும்பினர்.

# பிரபஞ்ச வர்த்தமானம்

—:[ㅇ]:—

## அதிகலாப வரி ரத்து

வரவு செலவு மசோதாப் பற்றி சென்ற வாரம் காமன்ஸ் சபையில் விவாதம் நடைபெறுகையில் வியாபார ஸ்தாபனங்களின் அதிக லாபத்தின்மீது வரி விதிக்கும் யோசனை கைவிடப்பட்டுவிட்டதாக பிரதம மந்திரி அறிவித்தார். வியாபார சமூகத்தார் இதைப் பலமாக ஆக்ஷேபித்ததே இதன் காரணமென்று கூறப்படுகிறது. இதை மேஜர் அட்லி பாராட்டிப் பேசுகையில் ஜனங்களால் தேர்ந்தெடுக்கப்பட்ட பிரதிநிதிகளின் கருத்துக்கு இணங்கி நடக்கும் அரசாங்கம் இந்நாட்டிலிருந்து வருகிறதென்பதற்கு இஃதோர் உதாரணமாகுமெனக் கூறினர்.

இந்த வரி ரத்து செய்யப்பட்டபோதிலும் இதற்குப் பதிலாக இரண்டு கோடியே 50 லக்ஷம் பவுன் வருமானம் கிடைக்கத்தக்க ஒரு புதிய வரி முறை அமைக்கப்பட்டிருப்பதாகவும், இதுவும் அதிக லாபத்தின் மீது விதிக்கப்படும் வரியாகவே இருக்குமென்றும் இதுபற்றி நிதி மந்திரி முதலில் வர்த்தகப் பிரதிநிதிகளுடன் கலந்து பேசவாரென்றும் டைம்ஸ் பத்திரிகையில் ஒரு செய்தி வெளியாகியிருக்கிறது.

* * * *

## மகுடாபிஷேகம் பற்றி பர்னார்ட்ஷா அபிப்பிராயம்

மிஸ்டர் ஜார்ஜ் பெர்னார்டுஷா ஆறாவது ஜார்ஜின் மகுடாபிஷேகத்தைப்பற்றி "டைம் அண்டு டைட்" பத்திரிகையில் எழுதியுள்ள ஒரு கட்டுரையின் சாரமாவது:—

மகுடாபிஷேக சம்பந்தமான சின்னங்கள் எந்த நிலைமையைக் குறிக்கின்றனவோ அதற்கு நேர் மாறான நிலைமையே தற்போது இருந்து வருகிறது. மன்னருக்கு எந்த அதிகாரங்கள் அளிப்பதைக் காட்ட அச்சின்னங்கள் உபயோகிக்கப்படுகின்றனவோ, அந்த அதிகாரங்கள் இப்பொழுது அவருக்குக் கிடையாது. எட்டாவது எட்வர்டு முடிதுறந்ததற்கு இந்தக் கர்னாடகமான; சிறிதும் அர்த்த மற்ற, கேலிக் கூத்தாயுள்ள சடங்குகளுக்குட்பட அவர் மறுத்ததுதான் காரணமேயன்றி ஒரு அமெரிக்க ஸ்திரீயை விவாகம் செய்துகொள்ள முன்வந்ததல்லவென எனக்குத் தெரிய வருமாயின் நான் ஆச்சரியப்படமாட்டேன்.

* * * *

## எரிமலையால் அழிந்துபோன நகரம்

பஸிபிக் மகாசமுத்திரத்தின் மேற்குப் பக்கத்திலுள்ள ராபால் என்ற நகரம், பல வருஷங்களாக ஓய்ந்திருந்த இரண்டு எரிமலைகள் திடீரென்று தீக் கக்கவாரம்பித்ததால் அழிந்து விட்டதாக டைம்ஸ் ஆப் இந்தியா பத்திரிகைக்குச் செய்தி வந்திருக்கிறது. ஒரு தீவு அடியோடு மறைந்து விட்டது. இன்னொரு தீவு புதிதாகத் தோன்றியிருக்கிறது. ஆஸ்திரேலியாவின் ஆதிக்கத்திற்குட்பட்ட "நியூ பிரிட்டன்" என்ற பிரதேசத்திற்கு ராபால் தலை நகரம். இது ஸிட்னிக்கு வடக்கே 1800 மைல் தூரத்திலிருக்கிறது.

ராபாலுக்கப்பாலுள்ள கடலில் தீவுகளாயுள்ள வூலான், மடூபி என்ற இரண்டு எரிமலைகளும் மே 30-ந் தேதி இரவு தீக்கக்க ஆரம்பித்தன. ஆனால் ஜனங்களுக்கு முன்னதாக எச்சரிக்கை செய்யப்பட்டிருந்ததால் உயிர்ச்சேதமெதுவுமேற்படவில்லையென்று கருதப்படுகிறது. எரிந்த கரித் தூள்களும் நெருப்புக் குழம்பும் எரிமலையிலிருந்து வெளிப்பட்டு நகரத்தில் பரவி ஆகாரப் பொருள்களை நாசமாக்கிவிட்டன. ராபால் துறைமுகம் மேடிட்டுப் போய்விட்டதாயும் இனி பெரிய கப்பல்கள் அங்கு வரமுடியாதென்றும் தெரிகிறது.

* * * *

## பாப்பாண்டவருக்கு ஹிட்லரின் எச்சரிக்கை

சமீபத்தில் சிகாகோ ஆர்ச் பிஷப் ஜெர்மனியில் கத்தோலிக்கர் கேவலமாக நடத்தப்படுவதுபற்றி ஜெர்மன் சர்க்காரையும் ஹெர் ஹிட்லரையும் கடுமையாகத் தாக்கிப் பேசினர்.

ஜெர்மன் சர்க்கார் இதைப் பலமாக ஆட்சேபித்து தங்கள் கண்டனத்தைப் பாப்பாண்டவருக்குத் தெரிவித்திருக்கின்றனர். அக்கண்டன அறிக்கையில் பாப்பாண்டவர் சிகாகோ ஆர்ச் பிஷப்பைப் பகிரங்கமாகக் கண்டிக்க மறுத்ததன் மூலம், தமக்கும் ஜெர்மன் சர்க்காருக்கும் நல்லுறவு இருக்க இடமில்லாது செய்து விட்டதாகத் தெரிவிக்கப்பட்டிருக்கிறது.

இது பாப்பாண்டவருக்கு ஒரு இறுதியான எச்சரிக்கையாகுமென்றும், அவர் அந்த ஆர்ச் பிஷப்பைக் கண்டிக்காமலிருந்தால், அவருக்கும் தங்களுக்கும் உள்ள உறவை ஜெர்மன் சர்க்கார் ரத்து செய்து விடுவரென்றும் சொல்லப்படுகிறது.

* * * *



வின்ட்ஸர் கோமகன் தம்பதிகளும் அவர்களது சிநேகிதர்களும். விவாகத்திற்குப் பிறகு எடுத்த படம்.

## வின்ஸர் கோமகன்-மிஸஸ் வார்பீல்ட் விவாகம்

வின்ஸர் கோமகன் மிஸஸ் வாலிஸ் வார்பீல்ட் இவர்களது விவாகம் சென்ற 3-ந் தேதி காலை 11-47-க்கு நடந்தேறியது. விவாகத்திற்கு முன்னுள்ள லௌகிகச் சடங்கை மான்ட்ஸ் நகர மேயர் நடத்தி வைத்தார்.

அவர் விவாக தம்பதிகளை நோக்கி, “நீங்களிருவரும் சதிபதிகளாகிவிட்டதாகச் சட்டத்தின் பெயரில் நாம் அறிவிக்கின்றோம்” எனத் தெரிவித்தார்.

இதன்பேரில் அத்தம்பதிகள் மதச் சடங்குகளை நடத்தும்பொருட்டு அடுத்தாற்போலுள்ள சங்கீத அறைக்குள் சென்றனர். அங்கு அவர்கள் ரெவரண்டு ஜார்டைன் முன் வெள்ளை நிறமுள்ள பட்டு குஷன்களின் பேரில் மண்டியிட்டார்கள்.

லௌகிகச் சடங்கு அதிக ஆடம்பரமானதாயல்லை. மணமகனும் மணமகளும் நாற்காலிகளில் அமர்ந்திருந்தனர். கோமகனின் சாட்சியாக மேஜர் மெட்காப்பும், மிஸஸ் வார்பீல்டின் சாட்சியாக மிஸ்டர் ஹொம ரோஜர்ஸும் அவர்களுக்கருகில் உட்கார்ந்துகொண்டிருந்தார்கள்.

‘மிஸஸ் வார்பீல்டை உங்களது மனைவியாகக் கொள்வீர்களா?’ என மேயர் கேட்டபொழுது வின்ஸர் கோமகன் “கொள்வேன்” என உறுதியான முறையில்பதிலளித்தார்.

கணவனாகக் கொள்வீர்களா?” என மேயர் மணமகளைக் கேட்டார். அவள் “கொள்வேன்”, என பதிலளித்தபொழுது அவளது தொனி உறுதி வாய்ந்ததாகத் தோற்றவில்லை.

பிறகு மேயர் சில நிமிஷங்கள் பேசினார்.

மதச் சடங்கு முடிவுற்றதன் பேரில் மங்கள வாத்தியம் வாசிக்கப்பட்டது. விவாகத்துக்கு வந்திருந்த விருந்தாளிகள் தம்பதிகளைப்பாராட்டினர்.

பிறகு வின்ஸர் தம்பதிகள் தங்களைப் படம் பிடிக்கும் பொருட்டு பத்திரிகை போட்டோகிராபர்கள் முன் பல நிமி[illegible]ரம் நின்றார்கள்.

வின்ஸர் தம்பதிகள் உல்லாஸப் பிரயாணமாக ஆஸ்டிரியா சென்றனர்.

* * * *

## சாதாரண குடும்ப ஸ்திரீயை மணந்த இளவரசர்

லிபபி (நெதர்லண்டு தேசத்திற்கருகிலுள்ள ஒரு தனி ராஜ்யம்) ராஜ்யத்தைச் சேர்ந்த நான்காவது லியபால்டு இளவரசரின் மூத்த குமாரரான எர்னஸ்ட் லியபால்டு இளவரசர் இரண்டாவது முறையாக ஒரு சாதாரண குடும்பத்தைச் சேர்ந்த ஒரு மங்கையை விவாகம் செய்துகொண்டிருக்கிறார். ஹொர்தர் வீலண்டு எனப் பெயர்கொண்ட அம்மங்கைக்கு 25 வயதாகிறது. அவள் பெர்லினிலுள்ள ஒரு துணிக்கடையில் தலைமை அதிகாரியாக இருந்தவள். இவ்விவாகத்திற்கு மணமகனின் குடும்பத்தைச் சேர்ந்த எவரும் வர்வில்லை. எர்னஸ்ட் லியபால்டு இளவரசர் தமது முதல் மனைவியுடன் விவாக ரத்து செய்துகொண்டுவிட்டார். அவருக்கு 35 வயதாகிறது.

* * * *

## மற்ற நாடுகளுக்கு ஹிட்லர் சூடு

ஹெர் ஹிட்லர் சமீபத்தில் 1,50,000 நாஸிகளடங்கிய ஒரு கூட்டத்தில் பேசுகையில் பின்வருமாறு பேசினார்:—ஜெர்மனி என் ஆயுதப்பரிஹரணம் செய்யவில்லையெனச் சிலர்கேட்கின்றனர். ஜெர்மனிக்கு மற்ற நாடுகளிடம் அவநம்பிக்கை ஏற்பட்டுவிட்டது. இப்பொழுது முதலில் மற்ற தேசங்களே ஆயுதப்பரிகாரணம் செய்து காட்டவேண்டும். முன்பு ஜெர்மனி ஆயுதப்பரிகாரணம் செய்த பொழுது மற்ற நாடுகளும் அங்ஙனமே செய்து, அதனால் விளையக்கூடிய நற்பயன்களைப் பெற்றிருக்கலாம். ஆனால் அப்பொழுது அவை அலட்சியமாக இருந்துவிட்டு ஜெர்மனி தனது ஆயுதங்களைப் பெருக்கிக் கொண்ட பிறகே ஆயுதப்பரிகாரணத்தின் நற்பலன்களை உணர்ந்திருக்கின்றன.

ஜனநாயக முறை விரும்பத்தக்கதன்று. ஏனெனில், அது வேலை நிறுத்தங்களுக்கும் கிளர்ச்சிக்கும் காரணமாயிருந்து வருகிறது. ஜெர்மனி சென்ற நான்கு வருஷங்களில் சாதித்திருப்பதைத் “தேசிய அபேதவாதம்” ஒன்றினாலேயே சாதிக்க முடியும். நமது லக்ஷியத்தை அடையும் துறையில் நாம் முன்னேறிச் செல்வதை ஜெர்மனிக்குள்ளோ அல்லது அதற்கு வெளியிலோ உள்ள எவரும் தடுக்கமுடியாதென்பது திண்ணம்.

ஜெர்மனியில் மதத் தகராறு நடப்பதை நான் சகித்துக் கொண்டிருக்கமாட்டேன். சில மனிதர்கள் செய்துவருவது போல் கடவுள் நம்மிடையே பிளவுகள் உண்டாக்கவில்லை. நமது வேலையை நம் எதிரிகள் குலைக்க முடியாதவாறு ஆண்டவன் அதை ஆசீர்வதித்துள்ளார்.”



# நவ நாகரீகம்

### "ஏலமும், ஏலமும்"

(காசினி எழுதியது.)

* * * 'புத்தப் புதியசாமான்கள் எல்லாம் உங்கள் ஊரில் ஏலத்தில் மலிவாகக் கிடைக்குமாமே?' என்று நீ கேட்டிருந்தாயல்லவா? போன வாரம் நாங்கள் ஒரு ஏலத்திற்குப் போயிருந்தோம்; விமரிசையைக்கேள். எங்கள் பக்கத்து வீட்டுக்காரர் பேபர் பிடித்துக்கொண்டிருக்கும்போது ஒரு விளம்பரத்தைப் பார்த்தார். அதில் வரும் திங்கட்கிழமை சுங்கம் கொடுக்கப்படாத, கைவிடப்பட்ட, பட்டு, புடவைகள் முதலியவை ஏலத்திற்கு முன்பு பார்வையிட பழைய "கஸ்டம் ஹவுஸில்" வைக்கப்படும். காலை பதினொன்று மணியில் இருந்து மாலை நாலு மணி வரையில் பார்க்கலாம் என்று போட்டிருந்ததைப் படித்தார். உடனே மனைவிக்குக் காட்டினார். அவள் எதிர் வீட்டுக்காரியிடம் சொன்னாள். பிறகு இரண்டு பேருமாக எங்காத்திற்கு வந்தார்கள். 'ஹார்பர் கிட்டேனு போக வேண்டும். சரியான வண்டி வசதி இல்லையே?' என்றேன்.

'நம்ம வீட்டு வாசலிலே பஸ்போகிறது. நாளை சாப்பாடு முடிந்ததும் புறப்பட்டால் காபிக்குக் திரும்பிவிடலாம்' என்றாள் பக்கத்தாத்துக்காரி பங்கஜம்.



நெல்ஸன் கம்பெனி சொந்தக்காரரான ஸ்ரீமான் எ. கே. மாணிக்க முதலியார் குமாரன் சுந்தரத்திற்கும் ஸ்ரீமதி ராணி பாய் அம்மாளுக்கும் சமீபத்தில் விவாகம் நடந்தது.

'இதெல்லாம் மொத்தத்தில் ஏலம் போடுவார்கள் ஏக கும்பலாக இருக்குமோ என்னமோ?' என்று நான் மறுபடியும் ஆக்ஷேபித்தேன்.

'போய்ப் பார்க்கலாமே. சும்மா சாக்குச் சொல்லாமல் வாருங்கோ!?' என்றாள் பங்கஜம்.

'வெயிலைப் பார்த்தாலாகுதா? காலையிலேயே போனால் தான் தேவலை. 'மதியம்' போனால் அப்புறம் அவுக ஆபீஸிலிருந்து வந்துவிடுவாக; டீ கொடுக்க வீட்டில் இருக்க வேண்டும்' என்றாள் எதிர் வீட்டு வேதவனம்.

மறுநாள் பத்தரை மணிக்குள் சாப்பாட்டை முடித்துக்கொண்டு மூவரும் பஸ்ஸுக்குக் காத்து நின்றோம். ராயபுரம் போகும் பஸ் வரும் வரையில் காப்பதாக ஏற்பாடு. மூன்று நான்கு பஸ்கள் சென்ற பிறகு, தூரத்தில் எங்கள் பஸ் வருவதைப் பார்த்தோம். மூன்று பேருக்குத்தான் இடமிருக்கும்போ லிருக்கிறது' என்றேன். எங்களுடன் மூன்று ஆடவர்களும் காத்திருந்தார்கள். இதைக் கேட்டதும், பஸ் நிற்பதற்கு முன்னே ஓடிச் சென்று ஏறிக்கொண்டுவிட்டார்கள். பஸ்ஸும் சென்றது.

'பார்த்தால் கனவான்கள் மாதிரியில் இருந்தது! ஏது





சமீபத்தில் நடந்த பம்பாய் கலவரத்தில் சிலா கைதி செய்யப்பட்டு வைக்கப்பட்டிருக்கும் காட்சி.



கோயமுத்தூர் பிரின்ஸிபல் ஸபார்டினேட் ஜட்ஜ் ஸ்ரீமான் ஆர். ரங்கசாமி அய்யங்கார் குமாரன் ராமாநுஜத்திற்கும் அட்வகேட் ஸ்ரீமான் ஜி. பார்த்தசாரதி அய்யங்கார் குமாரி லக்ஷ்மிக்கும் சமீபத்தில் விவாகம் நடந்தது.



ஹிந்துப் பத்திரிகை உதவி ஆசிரியர் ஸ்ரீமான் கே. பி. விஸ்வநாதய்யர் குமாரன் பஞ்சநதனுக்கும் பிரேஸர் அண்டு ராஸ் கம்பெனி ஸ்ரீமான் எல். எஸ். மாத்ருபூதமய்யர் குமாரி ராஜலக்ஷ்மிக்கும் சமீபத்தில் விவாகம் நடந்தது.



சென்னை ஜெர்மன் ஸ்தானீகர் காரியாலயத்தைச் சேர்ந்த ஸ்ரீமான் கே. ஜி. ரங்கசாமி அய்யங்காரின் குமாரி சௌந்திரவல்லிக்கும் எம். ஆராவமுதனுக்கும் சமீபத்தில் விவாகம் நடந்தது.

டா, மூன்று ஸ்திரீகள் அரைமணியாகக் காத்திருக்கிறுளே என்ற எண்ணமே இல்லையே' என்ருள் பங்கஜம்.

'அவுகளுக்கு பூக்கடைதான் போக வேணுமாம். அடுத்த பஸ்ஸுக்குக்காக்கக்கூடாதோ மறுபடி, ராயபுரம் பஸ்வர எவ்வளவு நேரம்பிடிக்குமோ?' என்ருள் வேதவனம். பாரீஸ் கார்னர் பஸ்ஸிலேயே ஏறி, அங்கு டிராமில் மாறுவதாகத் தீர்மானித்து, அடுத்த வண்டியில்ஏறினேம். டிராம் ஸ்டாண்டில், சரியான பக்கத்தில் நிற்காமல் முதல் டிராமைக் கோட்டை விட்டோம். கடைசியில், இடத்தை விசாரித்துக்கொண்டு பன்னிரண்டு மணிக்குப் போய்ச் சேர்ந்தோம். அங்கு எல்லாம் ஜில் என்று இருந்தது. இரண்டு மூன்று பேர்களை விசாரித்ததில்,எனக்குத தெரியாது உனக்குத் தெரியாது' என்று விட்டார்கள். கடைசியில், ஒருவன், 'சாமானே இன்னும் வந்து சேரவில்லை, வந்து, எடுத்து வைக்க நேரம் பிடிக்கும். நாளைக்கு வந்தால் பார்க்கலாம்'' என்ருன். 'இன்றைக்குப் பார்க்கலாம் என்று எதற்காக விளம்பரம் செய்தீர்கள்' என்று நாங்கள் கோபித்ததற்கு, 'எனக்குத் தெரியாதம்மா. ஒரு வேளை சாயங்காலம் தயாராகலாம்' என்ருன்.

இது எதடா கஷ்டம், என்று, சிவனேன்னு வீடு திரும்பினேம். 'பண நஷ்டத்திற்கும், தொந்திரவிற்கும் யாரு ஜவாப்தாரி? நஷ்ட ஈடுக்குக் கேஸ் போட வேண்டியதுதான்' என்ருள் பங்கஜம்.

'வேண்டாங்க அப்புறம் அது வேற செலவாகப் போகுது. கோர்ட்டு எப்படி இருக்குமோ?' என்ருள் வேதவனம்.

'புதன்கிழமை ஏலம், எப்படியும் போகத்தான் போறேன்' என்ருள் பங்கஜம். வேதவனம் வர மறுத்துவிட்டாள். ஏலத்தில் ஒரே கூட்டம். சாமானும் மனதிற்குப் பிடிக்கவில்லை வெளியில வந்து, டிராமில் ஏறிக்கொண்டோம்.

'இன்றைக்கும், வெறும் கையாக வீடு சென்ருல் எல்லாரும் சிரிப்பார்கள். டவுனில் ஒரு கடையிலும் இன்று ஏலம் போடுகிறுர்கள். அதில் ஏதாவது ஒரு புடவை வாங்கலாம்' என்று பங்கஜம் ஒரே பிடியாகச் சொன்னுள். அங்கு சென்ருேம்.

ஏலம் மும்முறமாக நடந்து கொண்டிருந்தது. ஒரு சிகப்பு நிறத்துணிப் புடவை; கரைக்கு மிகவும் அழகாக சரிகை மொக்குக் கட்டி இருந்தது. தலைப்புக்கும் நாலு விரல் அகலத்திற்கு சரிகை இழைத்திருந்தது. புட்வையைத் தூக்கிப் பிடித்து, ஏலம் கூறிக்கொண்டிருந்தார்கள். ஐந்து ரூபாய்வரையில் ஏறி இருந்தது. எங்களுடன் வந்திருந்த வேலையாளை, (ஏலம் கூறுவதற்காக இவனை அழைத்துச் சென்றிருந்தோம்) ஆறு ரூபாய்கள் என்று பங்கஜம் ஏத்தச் சொன்னுள். கடைசியில் பன்னிரண்டரை ரூபாய்களுக்குப் புடவையை வாங்கிக்கொண்டு வீடு திரும்பினேம். வீட்டில் லேடி சின்னையாவின் பெண்ணும் பிள்ளையும் எங்களுக்காகக் காத்துக்கொண்டிருந்தார்கள். 'ஷாபிங் போக வேண்டும் என்றீர்களாமே? நாளைக்குப் போகலாமா?' என்று லேடி சின்னையாவின் மகள் கேட்டாள்.

இதற்குள், பங்கஜம் நாங்கள் ஏலத்திற்குப்போன வைபவத்தை ஸர் சின்னையாவின் மகனிடம் கூறினுள். 'என்ன, உங்களுக்குக்கூடவா "இங்கு எல்லாம் ஏகக் கூட்டம், உங்களால் ஒன்றும் முடியாது, விலையும் போட்டியில் ஒன்னுக்கு மூணாக ஏறும் என்பது தெரியாது? எங்கு போனீர்கள்?' டவுன் ஏலத்தில் என்ன வாங்கினீர்கள்?' என்ருன்.

'சிரமப்பட்டதற்குப் பாதகமில்லை. சரிகை போட்ட புடவை மலிவாகக் கிடைத்து விட்டது'' என்று பங்கஜம் பொட்டலத்தைச் சுற்றி இருந்த கடுதாசைப் பிரித்தாள். எங்கள் மூஞ்சி அசடு தட்டினதைப் பார்க்க வேண்டுமே. மின்சார வெளிச்சத்தில் தூரத்தில் நாங்கள் சரிகை என்று எண்ணினது மஞ்சள் பட்டு. புடவை, ஆறு ஏழு ரூபாய் மதிப்புக்கு மேலில்லை.

'அவன் என் ஏற்றினுன். நான் சரிகை என்று ஏமாந்தேன். அவன் கிட்டேதானே நின்ருன்' என்ருள் பங்கஜம்.

'போட்டி, வேணும் உங்களுக்கு. ஏலம் என்ருல், எல்லாம் ஏலமா? நீங்கள் ஏலத்திற்குச் சென்று, நாற்காலியில் உட்கார்ந்து, விசிறி சுத்த, "வேடிக்கையாக", ஏதாவது வேண்டாத சாமானை வாங்கிக் கொண்டு வந்து, மலிவாகக் கிடைத்தது என்று சொல்வீர்களோ இல்லையோ? இனிமேலாவது இப்படி எல்லாம் கண்ட இடத்திற்கும் போகமாட்டீர்கள்; ஏலம், ஏலமென்ருல் எல்லாம் ஏலமாமா? மருது புளியமா?' என்று பாடினுன். எனக்கு அவனை அறையலாமா என்று வந்தது. எங்கள் ஊர் ஏலத்தைப்பற்றிக் கொஞ்ச காலத்துக்கு என்னிடம் பேசாதே. உனக்காகக் கூட என்னுல் இப்பொழுது ஒரு ஏலத்திற்கும் போக முடியாது.





தென்னிந்தியப் பிரமுகர்கள்



## ஸ்ரீ ஜகத்குரு பிரதிவாதி பயங்கரம்

# காதி அநந்தாசார்ய ஸ்வாமிகள்

(1874—1936)

---

(கே. எஸ். ஆர்.)

‘‘ப்ரஸித்தி பெற்ற வைதீக வித்வத் வம்சத்தில் ஜனித்து, பிரதிவாதி பயங்கரம் என்ற வம்ச பரம்பரையான பிருது நாமாவை அந்வர்த்த மாக்கியவர்; ஆனால் க்ருசமான திருமேனியோடு கூடிய உபசாந்த மூர்த்தி; மாம்ஸ பூயிஷ்டமான இந்த ப்ராக்ருத தேகம் மெலிந்து பலஹீனமடைய அடையத்தான் ஆத்ம சக்தியும் ஆத்ம குணங்களும் கூட அபிவிருத்தியடையக் கூடும் என்று நம்பி ஆசார ஆகாராதி நியமங்களாலும் தம் தேஹத்தை ப்ரயத்ன பூர்வகமாய் க்ருசதமமாக்கிக் கொண்டவர்; தபஸ் ஸ்வாத்யாபரர்; ஓம் சாந்தி: சாந்தி: சாந்தி: என்று மும்முறையாய் முறையிடும் ஸ்ருதிக்கு ஒரு நிதர்சன மூர்த்தி போல் விளங்கினவர்; சாஸ்திரங்களிலும் வேதாந்தங்களிலும் பரமோத்க்ருஷ்டம் என்று வழங்கப்பட்டிருக்கும் ஆத்ம குணங்கள் யாவற்றையும் தமதாக்கிக் கொண்டவர்; ஸ்ரீவைஷ்ணவ குலத்திற்கே குன்றின்மேலிட்ட விளக்கு போன்றவர்; ஸ்ரீபகவத் ராமானுஜ சித்தாந்தம் எல்லா ஜன சமூகத்திற்கும் அபிமதமாகி அவர்களுடைய இஹபர ஸ்ரேயஸ்ஸிற்கு ஆக வேண்டுமென்னும் பேராசை கொண்டவர்; எவ்விதமான ஆடம்பரமுமின்றி மகான்களுக்குரிய அடக்கமும் அமரிக்கையுமே பூஷணங்களாகக் கொண்டு இவ்வளவு பிரக்யாதி பெற்ற மஹான் இவர்தானோ என்று ஜனங்கள் பிரமிக்குமாறு தம் சிறுமையினாலேயே பெருமை பெற்றவர்: கலா விஸ்வாஸமிருப்பினும் கலாவைஷம்யம் சிறிதுமில்லாத மஹான் என்று ஸ்ரீவேதாந்த தீபிகை பத்திரிகையில் அதன் பத்திராதிபரும், ஸ்ரீவைஷ்ணவ சித்தாந்த ப்ரசாரத்தில் அக்ரேஸராகச் சோபிப்பவருமான சென்னை ஹைகோர்ட்டு மாஜி ஜட்ஜி ஸ்ரீமான் வி. வி. ஸ்ரீநிவாஸ அய்யங்கார் எழுதியுள்ளது, படிப்போர் யாவருக்கும் இம்மஹானின் குண வைபவங்களைப் படம் பிடித்துக் காட்டுவது போலாகின்றது! ஸ்ரீஜகத்குரு காதி அனந்தாசார்யஸ்வாமியின் பிரபாவம் சொல்ல வொண்ணாதது. ஸ்ரீசிருங்கேரி மடாதிபதிகளாக விருந்த ஸ்ரீசச்சிதானந்த சிவாபிநவ நருஸிம்ஹபாரதி ஸ்வாமிகள்போல் இவரும் ஸ்வசித்தாந்த பக்ஷபாதியாகி, அதன் பிரசாரத்தில் அல்லும் பகலும் அனவரதமும் ஈடுபட்டு வந்தார்.

### பிரதிவாதி பயங்கரம்

ஸ்ரீ ஜகத்குரு பிரதிவாதி பயங்கரம் அனந்தாச்சார்ய ஸ்வாமிகள் காஞ்சிபுர க்ஷேத்திரத்தில் 1874-ம் வருஷத்தில் பிரதிவாதி பயங்கரம் என்று பிரசித்தமாக வழங்கிவந்த ஒரு சிறந்த குடும்பத்தில் ஸ்ரீ கிருஷ்ணமாச்சாரியார் என்பாரின் புத்திரராகப் பிறந்தார். இந்த ‘‘பிரதிவாதி பயங்கரம்’’ என்ற சிறப்புப் பெயரானது இக்குடும்பத்தில் உதித்த ஒருவருக்கு, சில நூற்றாண்டுகளுக்கு முன்பு ஸ்ரீ நிகமாந்த மகா தேசிகனின் சிஷ்யர் ஒருவரால், அவருடைய திறமையைக் கோஷிக்க, வழங்கப்பட்டது என நாம் அறிகிறோம்; அதாவது இவர் வாதம் செய்ய வாரம்பித்துவிட்டால் இவருக்கு எதிராக எவராலும் பதில் கூற முடியாது என்பதே இப்பட்டத்தின் தாத்பர்யமாகும். இவர் இளமையிலிருந்தே தாம் தோன்றிய குடும்பத்தின் சிறப்பிற் கேற்றபடி வாழ்ந்து வந்தார். சிறு பிராயத்திலேயே இவரது வதனமானது பார்ப்போர் எவரையும் வசீகரிக்கும் தோற்றமுடையதாக அமைந்துவிட்டது. ஆகவே இவர் தம்மையண்டுவோர் அனைவரையும் எளிதில் ஆகர்ஷிக்கும் தன்மை கொண்டிருந்தார். பொதுவாக பெரிய மகான்களின் அம்சம் யாதெனில், பிறரை தம்மிடம் ஆகர்ஷித்து அவர்களை தம் வழியில் வசப்படுத்துவதேயாகும். இது நிற்க, இவருக்கு இவருடைய பிதாவினால் உசிதமானபடி வித்யாப்யாஸம் வழங்கப்பட்டது.

### இளம் பிராயத்திலேயே விசேஷ ஞானம்

இளம்பிராயத்திலேயே இவரை இவரது பிதாவான ஸ்ரீமான் கிருஷ்ணமாச்சாரியார் தம்முடன் வடதேசத்திற்கும் அழைத்துச் செல்வது வழக்கமாம். பின்பு இவர் வித்யாப்யாஸத்திற்காக திருப்பதி க்ஷேத்திரத்தில் வசித்து, தம் சிஷ்ய சமூகத்திற்கு ஞானத்தைப் புகட்டிவந்த ஸ்ரீமான் ஸ்ரீரங்காச்சாரியரிடம் ஒப்புவித்தார்கள். ஸ்ரீரங்காச்சாரியார் சதுஸ் சாஸ்திரங்களிலும் நிபுணராகவும், மகாவித்வானாகவும், ஸ்ரீ வைஷ்ணவ சமூகத்திற்கு ஒப்புயர்வற்ற பூஷணமாகவும் பிரகாசித்து வந்தவர். தவிரவும் இவ்வாசார்யர் இவருக்கு மாதுலராக விருந்தவர். ஆகையினால் ஸ்ரீ ரங்காச்சார்யார் தமது சகோதரியின் குமாரனை இவருக்கு வெகு சீக்கிரத்தில் காவியநாடகாதிகளைப் பூராவும் போதித்து விட்டார். இவரும் தமது குருவிடமிருந்து ஸாஹித்ய சாஸ்திரம் முழுமையும் சந்தேகம் சிறிதுமின்றி கிரஹித்துக் கொண்டார்; இவ்விஷயத்தில் இவருக்காகவென அமைந்திருந்த இவரது ஞாபகசக்தியானது இவருக்குப் பெரிதும் உதவியது தாம் படித்தவை, கேட்டவை ஒன்றையும் இவர் மறப்பதில்லை. இவ்வாறு தமக்குப் பதினாறுவது ஆண்டுபூர்த்தியாகும் முன்னர் இவர் டலரும் பிரமிக்கும்படியான விதமாக தர்க்கசாஸ்திரம், மீமாம்ஸா சாஸ்திரம், வேதாந்த சாஸ்திரம் முதலியவைகளில் விசேஷ ஞானத்தை சம்பாதித்துக்கொண்டார். இதற்குப்பின் காலக்கிரமத்திலேயே இவருக்கு விவாகமும் நடைபெற்றது.

### மக்கள் இகபரசுகத்தை யடைய வேண்டுமென்பதே அபிலாஷை

பின்பு சில வருஷங்கள் இவர் காஞ்சிபுரத்திலேயே இல்லறம் நடத்திவந்தார். ஆயினும் இவர் ஒருபோதும் இல்லற சுகத்தில் மிக்க விருப்பம் கொண்டதில்லை. இவ்வாறு சிறிதும் பற்றில்லாமல் இருந்த இவருக்கு இவ்வுலகத்தினரின் துயரைப் போக்குவதற்கான மார்க்கத்தைத் தேடவேண்டும் என்ற எண்ணமே சதா இருந்து வந்தது. நம் மக்களுக்கு நமது மதத்தின் உயர்வை எடுத்துச் சொல்லி, மோக்ஷ மார்க்கத்தை எடுத்துக்காட்டி, அவர்களது இகபர சுகத்தையே நாடவேண்டுமெனும் அபிலாஷையை இவர் தீவிரமாக மேற்கொண்டார். இத்தகையதானதொரு பெரும் கைங்கரியத்தை அனுஷ்டிப்பதற்கு, கிருஹஸ்தாசரமத்தில் இருப்பது விருத்தமாகும் என்பதை உணர்ந்தார் இவர். இக்காரணம் பற்றியே இவர் தமது 30-வது ஆண்டு முடிவாகும் முன்பேயே மணவாழ்க்கையினின்றும் பிரிந்து, தனிமையாக வழ்ந்து வரலானார். ஸ்ரீ வசிஷ்டாத்வைத சித்தாந்தத்தை ஸ்தாபித்த யதீந்திர உடையவரின் மார்க்கத்தை தாமும் கடை பிடிக்க வேண்டும் என்பது இவரது ஒரே நோக்கமாக அமைந்துவிட்டது ஸ்ரீ ராமானுஜ சித்தாந்தத்தை ‘‘திகந்தவியாபினி’’ யாகச்செய்ய வேண்டுமென இவர் தீர்மானித்தார். லோகஹிதத்தை உத்தேசித்து உபதேசிக்கப்பட்ட இந்தத் திவ்ய சித்தாந்தத்தின் பிரசார அபிவிருத்திகளுக்காக இவர் பெரிதும் சிரமபபட்டு, மனோபீஷ்டத்தின் சித்தியையும் அடைந்தார். இப்பெரியார் ஸ்ரீ வைஷ்ணவர்களுள் ‘தென கலை’ எனப்படும் பிரிவைச் சார்ந்தவராயினும், மற்றொரு பிரிவான வடகலையினருடன் ஒருபோதும் வைஷம்யம் பாராட்டியது கிடையாது சாதாரணமாக இவ்விரு கக்ஷிகளுள்ளும் ஒற்றுமையை விளைவிக்க இவர் கருதினர். இவருக்கு ஸ்ரீ நிகமந்த மகா தேசிகன அருளிச் செய்த கிரந்தங்களில் விசேஷ பக்தியும் சம்மதமும் உண்டு. ஆகையினால் இவர் இந்த நூற்றாண்டின் ஆரம்ப வருஷங்களில் ஸ்ரீ தேசிகனுடைய கிரந்தங்களை அச்சிடும் தொண்டில் ஈடுபடலானர். ‘‘சத தூஷணி’’ போன்ற சிறந்த கிரந்தங்களை அச்சிட்டு வெளியாகும்படி

இவர் செய்தார். இவருக்கு இம்மாதிரியாக ஸ்ரீ தேசிகன் ஸ்ரீ விசிஷ்டாத்வைத சித்தாந்த ஸ்தாபனத்திற்காக எழுதிய கிரந்தங்களை அச்சிட்டுப் பிரசுரிக்க வேண்டும் என்பதே பிரதான காரியமாக இருந்தது. இதுவரை வெளிவராத கிரந்தங்களையும் வெளியிட்டு, நம் சித்தாந்தத்தின் சிறப்பை நிலை நாட்டவேண்டும் என்ற மனோதிடத்தை இவர் கொண்டார். இவ்வாறாக இவர் வெளியிட்ட தேசிகக் கிரந்தங்கள் பரமலோகோபகாரமாக ஆயின.

பம்பாயில் பீடஸ்தாபனம்

ஸ்ரீபகவத் ராமானுஜ சித்தாந்தத்தை வியாபிக்கச் செய்ய வேண்டுமென்று இவர் 1910-ல் வடநாட்டிற்குச் சென்று, பம்பாய் நகரத்தில் ஒரு மடத்தை ஸ்தாபித்தார். இங்கிருந்து இந்த ஸ்வாமிகள், பல ஆச்சரியகரமான உபந்யாஸங்களைச் செய்து அநேகம் ஜைன மதஸ்தர்களையும் மற்றும் இதர மதஸ்தர்களையும் ஸ்ரீராமானுஜ சித்தாந்தத்தைத் தழுவும்படிச் செய்தார். தவிர அநேகம் கோடீஸ்வர பிரபுக்களும் இவரது சிஷ்யர்களாக வந்து சேர்ந்தனர். பின்பு இவர் இவர்கள் எல்லோருடைய விருப்பத்திற்கிணங்கி 1914 முதல் 1920 வரை ஒரு பெரிய யாத்திரை சென்று வந்தார். வட இந்தியாவில் இந்த ஸ்வாமிகள் ஒரு ராஜாபோல் பலவிதமான மரியாதைகளுடன் தங்கப்பல்லக்கில்; யானை, குதிரை, காலாள் முதலியவை புடைசூழ எங்கும் வரவேற்கப்பட்டார். மிகுந்த கௌரவத்துடன் தமது சிஷ்ய ப்ரக்ருதிகளுடனும் இவர் காசி, மதுரை, பத்ரிகாச்ரமம், கல்கத்தா, குஜராத் பிரதேசம், மஹாராஷ்டிரம், ஹைதராபாத் சமஸ்தானம், ஆந்திர தேசம், தென்னிந்தியாவில் திருப்பதி முதல் கன்யாகுமரி முனை வரையிலும் யாத்திரை செய்தார். வழியில் எல்லாக் கோவில்களிலும் இந்த ஜகத்குருவிற்கு மரியாதைகள் குறைவின்றி வழங்கப்பட்டன. பின்பு இவர் காஞ்சீபுரத்திற்கும் சென்று கடைசியில் பம்பாய் நகருக்கே திரும்பினார். போனவிடமெல்லாம் இவர் செய்த பிரசங்கங்களானது, மக்களின் ஆவலத்தையும் உத்ஸாஹத்தையும் எழுப்பி, இவர் வசமாக்கின. இவரது பிரசங்க தோரணையிலேயே இன்புற்றவர் அநேகர்.

பம்பாயில் ஸ்ரீ வேங்கடேசப் பெருமாள் ஸன்னிதி ஸ்தாபனம்

1920-ம் வருஷம் முதல் இந்த ஜகத்குரு ஸ்வாமிகளுக்கு பம்பாயில் சித்தாந்த பரவசனத்திற்காக ஒரு பெரிய வசதியை உண்டாக்க வேண்டுமென்னும் தீர்மானம் உதித்துவிட்டது. பம்பாய் நகரில் இருந்த அநேகம் தென்னிந்தியர்களை மனதில் எண்ணி இவர் 1920-ல் ஒரு பெரிய ஆலயத்தை ஸ்ரீ வெங்கடேச பகவானுக்காக நிர்மாணம் செய்ய வாரம்பித்தார். சுமார் எட்டு வருஷ காலம் மொத்தம் 10 லக்ஷம் ரூபாய்ச் செலவில் இந்த ஆலயம் கட்டி முடிக்கப்பட்டது. இக் கோவிலானது இந்த ஸ்வாமிகளுக்குக் கிடைத்து வரும் வருமானத்தையும் சிஷ்யர்களின் தர்ம சிந்தனையைக் கொண்டும் கட்டுவிக்கப்பட்டதாகும். இவ்வாலயத்தில் ஒவ்வொரு பாகத்தை நிர்மாணிக்கும் விஷயத்திலும் இவர் விசேஷ சிரத்தை எடுத்துக்கொண்டார். இந்த ஸ்வாமியின் உழைப்பு இருந்திராவிட்டால் இவ்வளவு ரமணியமானதும் அழகானதும், விஸ்தாரமானதுமான ஆலயம் கட்டப்பட்டு இருந்திருக்காது என நாம் சொல்லலாம். சாஸ்திரீய விதிகள் பிரகாரம் இவர் இவ்வாலயத்தின் உட்புறத்தே சுமார் நூறு மூர்த்திகளின் உருவங்களை உயர்ந்த சிற்பிகளைக் கொண்டும் செதுக்கும்படிச் செய்தார். இவ்வரிய ஆலயத்திற்கு காஞ்சீபுரத்திலிருந்து இவர் ஸ்ரீ யதோக்தகாரி பெருமாளை சுமார் நாலு மாத காலத்தில் கால்நடையாகப் பல்லக்கில எழுந்தருளப் பண்ணி, வெகு விமரிசையாக சுமார் ஒரு லக்ஷம் ரூபாய்ச் செலவில் பிரதிஷ்டை செய்வித்தார். இதற்கப்புறம் இக்கோவிலில் பிரதி வருஷமும் மிகுந்த விபவத்துடன் உத்ஸவாதிகள் நடத்தப்பட்டு வருகின்றன. எல்லா விஷயமாகவும் இவரே இங்கு முன் நின்று வந்தார். 1935-ம் வருஷம் ஜூன் மாதம் இவர் இக் கோவிலின் நிர்வாகத்தை டிரஸ்டிகளுக்கு ஒப்புவித்தார். இந்த ரிஜிஸ்டர் பத்திரம் மூலம் இவர் தமது பெயரில் இருந்துவந்த கோவிலின் விசேஷ சொத்துக்களை டிரஸ்டிகளுக்கு வழங்கிவிட்டார். இந்தக் கோவில நிர்வாக விஷயமாக ஒரு விதத்தகராறும ஏற்படக்கூடாது என்பது இவரது எண்ணம்; கோவில சம்பந்தமாக ராஜாங்கம் தலையிடாவண்ணம் செய்ய இவர் நோக்கம் கொண்டார்.

இவர் அநேகம் வித்வத் சதஸ்ஸுகளைக் கூட்டியதுண்டு. இந்தப் பண்டித சபைகளில இவர் தாமும் மற்றவர்களுடன கலந்துகொண்டு சந்தோஷிப்பது வழக்கம். தவிரவும் பண்டிதர்களுக்கு உசிதப்படி மரியாதைகளும, சால்வைகளும், பஹுமானங்களும இவர் செய்தனுப்பிவந்தார். சபையோருக்குப்புலப்படும் விதமாக எளியவிதத்தில் சூக்ஷ்மங்களை எடுத்துக்காட்டும் சக்தி இவரிடம் உண்டு. ஒரு சமயம இவர் காசிக்ஷேத்திரத்தில் தங்கியபோது அங்குசிலர் ஸ்ரீ பகவத் ராமானுஜமதம் வைதிகமல்ல என்று சொல்லிவந்தனர். உடனே இவர் திருப்பதியிலிருந்து ஸ்ரீ ராமானுஜ சித்தாந்த விஜயத்வஜர் மஹாமஹோபாத்யாய கபிஸ்தலம் தேசிகாச்சார்யஸ்வாமியை வரவழைத்தார். ஸ்ரீ கபிஸ்தலம் தேசிகாச்சார்யருக்கு எதிராக சபையில் வாதம்புரிய ஒருவரும் வரவில்லை. இவ்வாறு இவர் ஸ்ரீ வைஷ்ணவ சித்தாந்தத்தின மஹிமையை எங்கும் உணர்த்தி வந்தார்.

1934-ம் வருஷத்தில் இவரது ஷஷ்டி பூர்த்தி விழாவானது இவரது சிஷ்ய கோடிகளால் மிகுந்த சிறப்பாகவும் அதிக திரவியச் செலவிலும் கொண்டாடப்பட்டது. தமது அந்திய இரண்டு மூன்று வருஷங்களில் இவருக்கு தேக சௌக்யம் இல்லாதபோதிலும் இவர் தமது கடமையை மறக்காமல் செலுத்தி வந்தார். இறுதியில் சென்ற வருஷம் (1936) ஜூலை மாதம் 21-ந்தேதியன்று ஸ்ரீஜகத்குரு அனந்தாசார்ய ஸ்வாமிகள் கங்கா நதி ப்ராந்தியத்தில் பாட்னாவிற்கருகாமையில் சப்ரா சமஸ்தானத்தில், ஸ்ரீமந் நாராயணனுடைய பாத பங்கஜங்களை நாடிவிட்டார். இம்மஹானுடைய தேகவியோகத்தினால் வடநாடும் தென்னாடும் ஒருமிக்க துக்கித்தது.





## சூரிய மேட்டில் ரேகைக் குறிகள்

(12-ம் பக்கத் தொடர்ச்சி)

ரும் அங்குலாஸ்தி நீளமாயிருந்தால் சீர்திருத்தமின்றியே பொருள்களைச் சேர்த்து வைப்பர். இவரும் நல்லவரே. திடகாத்திரமுள்ளவர்தான். திடீரென மனமாறுதல் ஏற்படும். சிலரை விரோதித்துக் கொள்ளும் சுபாவமுண்டு. அவர்களை எதிரிகளாக்குவதால் பொறுமைக்காரராய் விடுவார்கள். எந்த சிக்கலான விவகாரங்களையும் ஆராய்ந்து சுருக்கமாய் விளக்கத்தக்க ஞானமுண்டு. யாவரும் விரும்பத் தகுதியாய் நடந்துகொள்பவர். வியாபாரத்தில் ஏராளமாய் பொருள் சம்பாதிப்பார். தாராளமான புத்தியுடையவர். பணத்தைச் சேமித்து மீத்து வைப்பதில் நம்பிக்கையில்லை. ஆயினும் வரவுக்குட்பட்ட வழியில் செலவிடுவர். அணாக் கணக்கில் சம்பாதித்து ஆயிரக் கணக்கில் பணத்தைக் கணக்கிடுவார்.

சூரிய ஆதிக்கமுள்ளவர் தங்கள் அபிப்பிராயங்களை பலபேர் அறிய வெளியிடுவதில் சற்றும் அஞ்சுவதில்லை. உள்ளக் கருத்தை ஒளியாமல் சொல்லுவர். மதப் பற்றுடையவராயிருப்பர். ஆனால் பிடிவாதங் கிடையாது. காரணமின்றி எதையும் நம்புவதில்லை. சோதிடம், ரேகை சாஸ்திரங்களில் தேர்ச்சி பெற்றிருப்பர். விஷயத்தை ஆழ்ந்து யோசிப்பதில்லை. புத்தியில் அருட் சக்தி கலந்திருப்பதால் தாம் எப்படி விஷயங்களைத் தெளிவுபடுத்துகிறார் என்பதை விளக்க முடியாது. எப்போதும் சந்தோஷமாயும் ஊக்கமாயுமிருப்பர். சதா காலமும் மனச் சுத்தமுள்ளவர். விரோதியையும் வசப்படுத்தக் கூடியவர். நிரந்தரமான நண்பர்கள் கிடையாது. நல்ல நண்பர்களை நாடுவதுமில்லை. தானும் எவருக்கும் ஆப்த நண்பராயிருப்பதில்லை. காலத்துக்கேற்ற நண்பர்கள் சிலகாலம் காரியாம்சமாய்ச் சேர்ந்திருப்பர். உலக யாத்திரை செய்வதில் இஷ்டமுள்ளவர். தனது குற்றங் குணாதிசயங்களை ஒப்புக்கொளவர். பிறர் சொத்தை இச்சிப்பதேயில்லை. தனக்கு வேண்டியது சங்கல்பிக்கும்போது கிடைக்கிறது. பஞ்சேந்திரியங்களின் வழியாய் விஷய சுகங்களைத் திருப்தியாய் அனுபவிப்பவர்கள் சூரிய ஆதிக்கமுள்ளவர்களே.

சூரிய ஆதிக்கமுள்ளோர் மற்றவர்களுக்கு அடங்கியிரார். அறிவிருந்தும் அடிமைப்படார். மற்றவர்கள் ஆதரவை ஏற்றுக்கொள்ளார். இவர்கள் சுயேச்சை வாதிகள். சமத்துவமே கொள்கை. இவைகளை நிரூபிக்க வேண்டி புத்தி ரேகை வளைவின்றி நீளமாய் அமைந்திருக்கும். அதாவது புத்திரேகை சந்திரமேட்டில் கீழ் நோக்கிச் சென்றிராது. இவர்களுக்கு புத்தியே பலம்.

இவ்வளவு பெருமையாய்ப் பேசப்படும் சூரிய ஆதிக்கமுள்ளோருக்கு மனமொத்த வாழ்க்கைத் துணைவி அமைவது அபூர்வம். அதாவது விவாகத்தாலே, இவர்கள் வாழ்க்கை பொதுவாய் பின்னப்படுகிறது. தேசாசாரமும் நவநாகரிகமும் ததும்பிய நாடுகளிலுங்கூட பெரும்பாலும் விவாகத்தால் கஷ்டப்பட நேரிடுகிறது.

சூரிய ஆதிக்கத்தில் கெட்ட மனிதர்களுமுண்டு. மோதிர விரல் கோணலாயும், கெட்டியாயும் அமைந்திருக்கும். மூன்றும் அங்குலாஸ்தி மிகக் கடினமாயிருக்கும். நகம் சிறுத்திருக்கும். விரல்கள் வளையாது பொதுவாய் இவர்களிடம் செல்வம் தங்காது. ஆடம்பரமும் வாய் வீச்சும் அதிகம். தற்பெருமையைச் சாமர்த்தியமாய் எடுத்துப் பேசுவர். பிரபலஸ்தராயிருக்கப் பிரயாசைப்படுவர். ஆபத்து நேர்ந்த காலத்தில் வஞ்சம் தீர்க்கத்தக்க பொல்லாதவராவார்கள். தங்களுக்குக் கிடைக்கவேண்டியதை மற்றவர்கள் தடைப்படுத்தியதாய் நினைப்பார்கள். பொதுவாய் காரியத்தில் அபஜெயமும், வாழ்க்கையில் துரதிர்ஷ்டமும் உள்ளவர்கள். ஆனால் வெறுக்கத்தக்கவர்களன்று. சூரிய ஆதிக்கத்தில் நேர்மாறானவர்கள். நல்வழியிலொன்றானால் தீயவழியிலுமொன்றெனக் கருதவேண்டும்.

சூரிய ஆதிக்கமுள்ளோர் சுகபோகியானதால் அளவுக்குமிஞ்சிப் புசிக்கமாட்டார். இவர்கள். தேகம் பித்தக் குறைவானது. பொதுவாய் இருதய சம்பந்தமான நோய் உண்டாகும். இதை உறுதிப்படுத்த நகங்களில் நீல நிறங்கலந்திருக்கும். இருதய ரேகையில் புள்ளிகள், தீவுகள் காணப்படும். குறுக்கிட்ட ரேகைகளும் நக்ஷத்திரக் குறிகளுமிருக்கும். சூரிய ஆதிக்கமுள்ளவர்கள் கண் பார்வையில் நாளாவண்ணம் தீக்ஷண்யம் குறையும். புத்தி ரேகையில், சூரிய மேட்டுக்கு நேர் கீழே தீவு காணப்படில் கண் நோயைக் குறிப்பதாகும். சூரிய உஷ்ணம் சிரசில் தாக்குமாதலால் வெய்யில் காலங்களில் ஜாக்கிரதையாயிருத்தல் நலம்.

முக்கோண கிரக அமைப்பைக் கவனியுங்கள். இது மத்தியில் செம்மையாயிருந்தால் விசேஷ பலனுடையதாகும். சனி மேட்டை நோக்கி கிரகம் திரும்பியிருந்தால், அதற்குரிய லாபத்தையும் மனச்சோர்வையும் கொடுக்கும். சனி கிரக அமைப்பு சூரிய மேட்டை நோக்கியிருந்தால், அடுத்தடுத்துக் கஷ்டத்தைக் கொடுத்துவரும். சூரியக்கிரக அமைப்பு புதனை நோக்கியிருந்தால் பேராதரவையளிக்கும். அன்பும் ஆதரவும் பெருகும். புதன் கிரக அமைப்பு சூரியமேட்டை நோக்கியிருந்தால் புதனுக்குரிய சாஸ்திர ஆராய்ச்சி, தொழிலில் புத்தி கூர்மை, வைத்தியத்தொழில் முதலியவைகளில் திருப்பிவிடும். கிரகமேடுகளின் தாராதரங்களை அறிந்துகொள்வதால், கிரகச் சார்பினால் ஏற்படும் நன்மைகளையும் தெரிந்துகொள்ளலாம்.

கை மிருதுவாயிருப்பதால் விசேஷ குணத்தையும் கெட்டியாய் அல்லது கடினமாயிருந்தால் சாமான்ய குணத்தையும் குறிக்கும். நாகரீகமாயிருக்கிற ஜனங்களுக்கு சூரிய ஆதிக்கமுண்டு என்பதைப்பொதுவாய் உணரவேண்டும். முதல் அங்குலாஸ்தி பெருமிதமாயும் மிருதுவாயுமிருந்தால் அன்பு மிகுந்தவராவர். இன்னும் மனதுக்கினிமையான வஸ்துக்களின் அழகை ஆராய்வார். மனது சூட்சுமமாய் வேலை செய்யும். மூன்றாம் அங்குலாஸ்தி மற்றிரண்டைவிடப் பருமனாயிருந்தால் ஸ்தூல புத்தி மாத்திரமிருக்கும். இரண்டாவது அங்குலாஸ்தி பருமனாயிருந்தால் தொழில் அல்லது வியாபாரத் துறையில் விசேஷமாய்ப் புத்தியைச்செலுத்துவர். கையும் விரல்களும் சதைப்பற்றியிருந்தால் சோம்பல் மிகுந்து, எவ்விதத் தொழிலிலுமீடுபடாமல் மனம் போன வழியில் ஆனந்தமாய்க் காலங்கழிப்பர். இவர்களுக்குத்துணை யாரெனில் அவர்களைப்போலுள்ளவர்களே. இவர்களுக்கு விரோதிகளே கிடையாது. ஊக்கமுண்டானால் நன்றாய் வேலை செய்பவர். ஓவிய (சித்திர) நிபுணரானால் பொது ஜனங்கள் விரும்பி வாங்கக்கூடியதைத் தயார் செய்வர். நாடக நடிகராயின் புத்தி சாதுர்யத்தால் பெருந்தொகை சம்பாதிப்பார்கள். எழுதக்கூடிய திறமையிருந்தால் நூலாசிரியராக அல்லது பத்திரிகை ஆசிரியராக இருந்து சாமர்த்தியம்போல் சம்பாதிப்பார். வியாபாரியாயின் பல வழியிலும் புத்தியைச் செலுத்தி ஆராய்ந்து பொருள் சம்பாதிப்பர். கை ரப்பர்மாதிரி மிருதுவாய் துவளக்கூடியதாயின் ரேகையும் அமைந்திருந்தால் அபார புத்தி நுட்பமுள்ளவரென திட்டமாய்ச் சொல்லலாம். சாமான்யரின் புத்திக் கெட்டாத பெரிய வேலைகளைச் செய்வர். அபாரமான யோசனை யுக்தி திடீரெனத் தோன்றும். பிரவிருத்தியிலீடுபட்டுக் கஷ்ட சுகத்துக்கும் உட்படுவர். தன்னடக்க முள்ளவர். எதையும் புகழ்ந்து பேசார். அறிந்தும் அறியாதவர்போலிருப்பர்.

பொது ஜனங்கள் சிலாகிக்கத்தக்க சிறந்த வேலைகளைச் செய்வர். கை கடினமாயிருந்தால் மூளையையும் அவ்வாறே கருதவேண்டும். சூரியமேட்டுக்குரிய சிறந்த பல குணங்கள் இதனால் அடங்கிவிட்டன. சூரிய ஆதிக்கமிருந்தும் இத்தகையோர் புத்திப் பிரகாசமில்லாததால் உத்தியோகத்திலமர்ந்து மற்றோர் சொன்னபடி நடக்க வேண்டியவராகின்றனர்.

விரல்களின் அமைப்பு நன்றாய்க் கவனிக்கத் தக்கது. ஆள்காட்டி முதல் விரலும், மோதிர விரலும் சம உயரமுள்ளவை. இந்த அளவு அபிலாஷை ஞானம் முதலியவைகளால் வித்தியாசப்படும்.

ஆள்காட்டி விரலைவிட மோதிர விரல் நீளமாயிருந்தால் படிப்படியாய் தொழில் முன்னேற்றமடைந்து வருவதைக் குறிக்கும். மோதிர (மூன்றாம்) விரல் இரண்டாவது விரலுக்குச் சமமாயிருந்தால் அல்லது சற்று முன் பின்னுமானாலும் பணத்தையும் கீர்த்தியையுங் கொண்டு, எந்த வழியிலாவது பணம் சம்பாதிக்க வேலை செய்வார். அதாவது குதிரைப் பந்தயம், லாட்டரி, திடீரென விலைமாறும் சரக்குள்ள தொழில் முதலியவைகளில் மும்முரமாயிருப்பர்.

இரண்டாவது விரலைவிட மோதிர விரல் உயரமாயிருந்தால், சூதாட்டத்தின் மூலமாய் உள்ளபொருளையுமிழந்து, இழந்ததையும் மீட்க வகையற்றவராவர். இன்னும் விரல் கோணலாய் முருக்கியிருந்தால் சூதிலும் சூது செய்பவராயிருப்பர். முதல் அங்குலாஸ்தி மிருதுவாயிருந்து சுலபமாய் பின்பக்கம் வளையக்கூடியதாயின், சூட்சும ஞானமுள்ளவரென்பதைக் குறிக்கும். முதல் அங்குலாஸ்தி அதிக நீளமாயிருந்தால், ஓவியத்திலும் கவி பாடுவதிலும் ஊக்கங்கொள்வர். மூன்றாம் அங்குலாஸ்தி நீளமாயிருந்தால் ஓவியராய் விளங்குவர். இரண்டாம் அங்குலாஸ்தி நீளமானால் வியாபாரம் செய்வதைக் குறிக்கும். முதல் இரண்டு அங்குலாஸ்திகளும் நீளத்தில் சமமாயிருந்தால் சித்திரம் எழுதி சம்பாதிப்பவராவர்.

இரண்டாம், மூன்றாம் அங்குலாஸ்திகள் சமமாய் முதல் அங்குலாஸ்தி குறுகியிருந்தால், பணம் சம்பாதிப்பதிலேயே கண்ணும் கருத்துமாயிருப்பர். ஓவியராகார். வருவாய் அல்லது ஜீவனத்துக்கு எது முன் நிற்கிறதென்பதை யூகித்தறியவேண்டும்.

விரல்களில் முடிப்புகள் பிரதானமாயிருத்தல் நலமன்று. இது நல்ல வழியென்று தகாத வழியில் செலுத்தும். முடிப்பு (இணைப்பு) தெரியாதபடி அமைந்திருந்தால் சூரிய ஆதிக்கத்துக்குரிய தெய்வீகமான புத்தியிருந்து எல்லாவகையிலும் மேன்மைதரும். ஓவியரானால் காக்ஷியிலுள்ள தத்துவங்களை விளக்குவர். வியாபாரியானால் தொழில் நுட்பமறிவார். விரல்கள் குறுகியிருந்தால், புத்தி நுட்பம் இயற்கையாயிருப்பதோடு, அவசரக்காரராயிருப்பர். இத்தகையோருக்கு முதலாவது உண்டாகும் யோசனையே நல்லதாய் அமையும்.

சூரிய ஆதிக்கமுள்ளோர்களை இவ்வுலகில் அதிமாய்க் காணலாம். அவர்கள் ஊக்கம், சந்தோஷம் சாதுர்யம்முதலியவைகளுக்குத் தக்கவாறு எல்லா வகையிலும் கலந்து தோன்றுவர்.

# ஜப்பானும் ஜப்பானியர்களும்

—:[o]:—

"எஸ். ஆர்."

ஜப்பான் தேசமென்று நாம் பொதுவாகக் கூறுவது ஐந்து பெரிய தீவுகளும் சுமார் நாலாயிரம் சிறிய தீவுகளும் அடங்கிய நாடாகும். இதைத் தவிர கொரியா, மஞ்சூரியா, பெர்மோசா முதலியவைகளும் ஜப்பானைச் சேர்ந்தவை. இத் தீவுகளின் மத்தியில் அநேக மலைகளும் உயர்ந்த சிகரங்களும் இருக்கின்றன. ஜப்பானின் மிகவும் உயர்ந்த சிகரமான "ப்யூஜி" என்பது மிகவும் அழகிய தோற்றமுடையது. ஜப்பானில் சமதரையும் மைதானமும் மிகக் குறைவு. 100-ல் 15 பாகம்தான் பயிரிடக்கூடிய நிலங்கள். ஆகையால் ஒரு அங்குலமும் வீணாக விடாமல், உழுது பயிரிட்டோ அல்லது தோட்டமிட்டோ உபயோகப்படுத்தி இருக்கிறார்கள்.

ஜப்பான் என்னும் பதத்திற்குச் சீன பாஷையில் உதய சூரியன் என்று பொருள். இப்போதும் ஆங்கிலத்தில் உதய சூரியனின் தேசம் என்று ஒரு பெயருண்டு.

ஜப்பானியர்கள் மங்கோலிய இனத்தைச் சேர்ந்தவர்கள். இவர்கள் ஜப்பான் தீவில் குடியேறும் முன் அங்கு ஐனு என்று பெயர் கொண்ட காட்டு மனிதர்கள் வசித்து வந்தனர். அவர்களைத் துரத்திவிட்டு அந்த நாட்டை ஜப்பானியர்கள் கைப்பற்றினர். இக்காலத்திலும் அந்தக் காட்டு மனிதர்களின் இனத்தைச் சேர்ந்தவர்களில் சிலர் ஜப்பானின் வடக்கே சில தீவுகளில் வசிப்பதாகத் தெரிகிறது.

ஜப்பானியர்கள் தோற்றத்தில், சீனர் கொரியர்களைப் போலவே காணப்படுகின்றனர். அவர்களின் புருஷர்களின் சராசரி உயரம் 5 அடி 3½ அங்குலம். ஸ்திரீகளின் உயரம் உயரம் 4 அடி 10½ அங்குலந்தான். அவர்கள், அகன்ற முகமும், வெளிக்கிளம்பின கன்ன எலும்புகளும், தட்டை மூக்கும், அகன்ற வாயுமுடையவர்கள். பொதுவாக எல்லா ஜப்பானியர்களும் குறுகிய கண்களும் குட்டையான கால்களுமுடையவர்கள். அவர்கள் சிரிக்கும்போது இந்தச் சிறிய கண்களும் இருக்குமிடம் தெரியாமல் மறைந்துவிடுகின்றன.

ஜப்பானியர்கள் எப்போதும் சிரித்த முகமுடையவர்கள். பிறரிடம் மிகுந்த வணக்கமாயும் நடந்துகொள்வார்கள். மனதில் எவ்வளவு துக்கமிருந்தபோதிலும் எள்ளளவும் வெளிக்காட்டிக் கொள்ளமாட்டார்கள். மிஷன் பள்ளிக்கூடத்துப் பாதிரி ஒருவர், ஐந்தாறு நாட்களாக ஒரு ஜப்பானியச் சிறுவன் பள்ளிக்கூடம் வாராமல்போகவே, விஷயம் என்னவென்று விசாரிக்க அவன் வீட்டிற்குச் சென்றார். அவனுடைய தாயார் அவரை மரியாதையுடன் வரவேற்று. ஆசனமளித்து வந்த காரணமென்ன என்று விசாரித்தாள். அவர் அதைத் தெரிவித்ததும் மிகவும் சாந்தமாக "நான்கு நாள் ஜுரம் கண்டு இருந்து நேற்றுதான் இறந்துபோனான்" என்றாள். அவள் தனது துக்கத்தைச் சிறிதும் வெளிக்காட்டாததைக் கண்டு அந்தப் பாதிரி மிகவும் வியந்தார்.

ஜப்பானியர்களின் வீடுகள் மரத்தினால் கட்டப்படுகின்றன. அறைகளுக்கு நடுவில் கதவுகளுக்குப் பதிலாக அழுத்தமான கடிதத்தினாலாகிய படுதாக்களை அமைக்கிறார்கள். வேண்டாதபோது இப்படுதாக்களை ஒருபுறமாகத் தள்ளி இரண்டு அறைகளையும் ஒன்றாக ஒரு ஹால் மாதிரி செய்துவிடலாம். இம்மாதிரி அவர்கள் வீடு கட்டுவதற்கு இரண்டு காரணங்கள் உள்ளன. முதலாவது அவர்களின் தேசத்தில் வீடு கட்டுவதற்கு வேண்டிய சாமான்களான, மண், செங்கல் முதலியவைகள் கிடையா. ஆனால் மரம் ஏராளமாகக் காடுகளில் கிடைக்கிறது. இரண்டாவது ஜப்பான் ஒரு எரிமலைப் பிரதேசமாகையால், அங்கு அடிக்கடி பூகம்பம் ஏற்பட்டு வீடுகள் கீழே விழுந்துவிடுகின்றன. மரத்தினாலும் அட்டையினாலும் வீடு கட்டினால் அதிகச் சேதமுண்டாகாது. ஆனால் 1931-ம் வருஷ பூகம்பத்திற்குப் பிறகு ஒசாகாவிலும் டோகியோவிலும், பூகம்பத்தினால் அதிர்ச்சி அடைந்து விழுந்துவிடாதபடி ஒரு புது மாதிரியாக அநேக மாடிகள் வைத்துக் கட்டடங்கள் கட்டியிருக்கின்றனர். இம்மாதிரிப் புதுவிதமாகத்தான் குவெட்டாவிலும் வீடுகள் கட்டப்பட்டு வருகின்றன.

ஒவ்வொரு அறையிலும் துளிகூட இடம் விடாமல் பாய் விரித்து இருப்பார்கள். ஜப்பானில் எந்த இடத்திற்குச் சென்றாலும் இப்பாய்கள் ஒரே அளவாகத்தான் விற்கப்படுகின்றன. அதன் நீளம் 6 அடி; அகலம் 3 அடி. ஒரு அறையின் விஸ்தீரணத்தைக் குறிக்க வேண்டுமானால், இத்தனை பாய்கள் கொண்ட அறை என்பார்கள்.

ஜப்பானியர்களின் முக்கிய ஆகாரம் மீனும் அரிசியும். தேயிலைப்பானம் தினம் மூன்று நான்கு தடவைகள் செய்வார்கள். ஆனால் அதில் அநேகர் பாலும் சர்க்கரையும் சேர்த்துக் கொள்வது இல்லை.

ரிக்ஷா வண்டியில் சவாரி செய்வது முதல் முதலாக ஜப்பானில்தான் ஆரம்பித்ததாகக் கூறுகிறார்கள். ரிக்ஷா என்னும் பதம் ஜின் ரிக்ஷா என்னும் ஜப்பானிய பதத்தின் திரிபு. ஜின் என்றால் மனிதன், ரிகி என்றால் பலம், ஷா என்றால் வண்டி. 'மனித பலத்தால்

இழுக்கப்படும் வண்டி என்று பொருள்.

அவர்கள் தமது குழந்தைகளை இடுப்பில் தூக்கிக்கொள்ளாமல், முதுகில் ஒரு துணியைக் கட்டித் தொங்கவிட்டுக் கொள்கிறார்கள். ஒரு நண்பரைச் சந்திக்கும்போது எப்படி வணங்குவதென்றால், இடுப்பை வளைத்து எவ்வளவு குனிய முடியுமோ அவ்வளவு குனிவதுதான். நாம் வணக்கமாக உட்காரும்போது காலை மடக்கிக்கொண்டு உட்காருகிறோம். ஆனால் அவர்கள் முழங்காலை முட்டியிட்டு உட்காருகிறார்கள்.

ஜப்பானியப் பள்ளிக்கூடங்களில் முதல் முதலாகச் சேரும் குழந்தைகளுக்குக் கற்றுக்கொடுக்கப்படும் விஷயங்கள், இம்மாதிரி வணங்குவது, முட்டியிட்டு உட்காருவது, வீட்டைப் புஷ்பங்கள் முதலியவைகளால் அலங்கரிப்பது என்ற விஷயங்கள்தான்.

ஜப்பானியர்களுக்குப் புஷ்பங்களென்றால் மிகவும் பிரியம். ஆனால் அவர்கள் அதைத் தலையில் சூட்டிக்கொள்வது இல்லை. வீட்டையும் தோட்டத்தையும் அலங்கரிப்பதற்காகப் புஷ்பச் செடிகளைப் பயிரிடுகின்றனர்.

அந்த அந்தக் காலத்திற்கு ஏற்றவாறு புஷ்பங்கள் புஷ்பிக்கும்போது, முதல் முதலாகக் கிளம்பும் புஷ்பங்களைக் கண்டு ஆனந்திக்கக் கூட்டம் கூட்டமாக, உற்சவத்திற்குச் செல்வதுபோல் தோட்டங்களுக்குச் செல்வது வழக்கம். உதாரணமாக அக்டோபர் மாதத்தில் சாமந்தி புஷ்பிக்கும். அக்காலத்தில் சாமந்திச் செடிகள் எங்கெல்லாம் இருக்கின்றனவோ அங்கெல்லாம் சென்று, புஷ்பங்களைக் கண்டு ஆனந்திப்பது வழக்கம். இம்மாதிரி ஒவ்வொரு மாதத்திலும் ஏதாவது ஒரு புஷ்பத்தின் முறை இருந்துகொண்டே இருக்கும்.

ஜனவரியின் முதல் தேதியின்போதுதான் ஜப்பானிய வருஷ பிறப்பும். இது ஜப்பானியர்களுக்கு மிகவும் விசேஷ தினம். அதற்காகப் பள்ளிக்கூடங்கள், காரியாலயங்கள், முதலியவைகளெல்லாம் 10 தினங்கள் மூடப்படுகின்றன. அப்போது எல்லாரும் புது உடை உடுத்து, அறிமுகமானவர்கள் வீட்டிற்கெல்லாம் சென்று குசலம் விசாரித்து வருவார்கள். ஒவ்வொரு வீட்டு வாசலிலும் தோரணம் கட்டுவார்கள்.

மார்ச்சு மாதம் 3-ந்தேதியன்று பெண்களுக்கென்று பிரத்தியேகமான ஒரு பண்டிகை உண்டு. அதற்கு 'ஹின மாத்சரி' என்று பெயர். அன்று பெற்றோர்கள் ஒவ்வொரு பெண்ணிற்கும், ராஜா ராணி, மந்திரி, சேனாதிபதி முதலிய பொம்மைகள் அடங்கிய ஒரு செட்டை வாங்கித் தந்து கொலு வைப்பார்கள். இக்காலத்தில் தான் அநேக விவாகங்கள் நடைபெறும்.

பிள்ளைகளுக்கு மே மாதம் ஐந்தாம் தேதி ஒரு பண்டிகை உண்டு. அன்று இறந்துபோன ஜப்பானிய வீரர்களின் உருவங்களையும், அவர்களின் கோட்டை, கவசம் முதலியவைகளைப் போன்ற பொம்மைகளையும் கொலுவைத்துக்கொண்டாடுவார்கள். ஒவ்வொரு வீட்டு வாசலிலும் ஒரு நீண்ட கழியை நட்டு துணியினால் மீன் போலக் கொடிகள் செய்து பறக்க விடுவார்கள். ஒரு வீட்டில் எத்தனை ஆண் பிள்ளைகள் இருக்கின்றனரோ அத்தனை கொடிகள் பறக்க வேண்டும். எல்லாக் கொடிகளின் நீளமும் ஒரே அளவாய் இராது. மூத்தவனுக்காகக் கட்டப்படும் கொடி சுமார் 15 அடி நீளமிருக்கும். மற்ற பிள்ளைகளின் கொடிகளின் நீளம் சிறிது சிறிதாகக் குறைந்துகொண்டேவரும். ஒவ்வொரு வீட்டிலும் எத்தனை ஆண் பிள்ளைகள் இருக்கின்றனர் என்று உள்ளே சென்று விசாரிக்காமலே கூறிவிடலாம்.

ஜப்பானியக் குழந்தைகளுக்குத் தம் தாய் தந்தையரிடம் மிகவும் அபிமானமுண்டு. இதை விளக்கும் கதைகள் அநேகம், பாட புத்தகங்களில் நாம் படித்து இருக்கிறோம். சீனர்களைப் போல இவர்களும் குழந்தை பிறந்தவுடனேயே அதற்கு ஒரு வயதாகிவிட்டதாகத் தீர்மானித்துவிடுகிறார்கள்.

ஜப்பானில் இரண்டு மதங்கள் உள்ளன. அவை பௌத்த மதமும் ஷிந்தோ மதமும். ஆனால் பௌத்த மதத்தினர்தான் அதிகமிருப்பதாகத் தெரிகிறது. இரு மதத்தினரின் கோவில்களும் அநேகம் ஜப்பானில் இருக்கின்றன. டோகியோவிலிருந்து 32 மைல் தூரமுள்ள காமகுரா என்னும் ஊரில் 'டைபுட்சு' என்று பெயர்கொண்ட ஒரு பெரிய வெங்கல புத்தசிலை இருக்கிறது. மியாஜிமா என்னும் தீவில் ஷிந்தோ மதத்தினரில் மிகவும் பிரசித்தமான கோவில் ஒன்று சமுத்திரக்கரையில் கட்டப்பட்டு இருக்கிறது. கோவிலிற்கு முன்புறத்தில் சிறிது தூரத்தில் 'டோரை' என்று பெயர்கொண்ட ஒரு வாசற்படி இருக்கிறது. இது சமுத்திரத்தில் கட்டப்பட்டு இருக்கிறது. சமுத்திரத்தில் ஜலம் அதிகமாகும்போது இதன் கோபுரம் தண்ணீரில் மிதப்பதைப்போல் தோன்றும்.

ஜப்பானியர்களில் சிலர் மீன் பிடிப்பதற்கு 'கார்மொரென்ட்' என்று பெயர்கொண்ட ஒருவித வாத்தை உபயோகிக்கிறார்கள். மீன் பிடிப்பவன் ஒவ்வொரு வாத்தையும் ஒரு நீண்ட கயிற்றில் கட்டித் தண்ணீரில் விட்டுவிடுகிறான். மீன்

களைத் தண்ணீர் மட்டத்திற்கு வரவழைக்க ஒரு தீவட்டியைக் கொளுத்திப்படகிலிருந்து ஒரு கொம்பில் தொங்கவிடுகிறான். பளிச்சென்று இந்த வெளிச்சத்தைக் கண்டதும் மீன்கள் மேலே வருகின்றன. அந்த வாத்து உடனே அதைக் கவ்விக்கொள்கிறது. மீனை அது விழுங்கிவிடாமல் இருப்பதற்கு அதன் கழுத்தில் ஒரு வளையம் போட்டு இருக்கிறார்கள். அவைகள் பழக்கப்பட்ட வாத்துகளானதால் மீனைப் பிடித்தவுடனே தன் எஜமானனிடம் கொண்டு வந்து கொடுத்துவிடுகின்றன. இம்மாதிரி மே மாதம் 11-ந்தேதியிலிருந்து அக்டோபர் 15-ந்தேதிவரையில்தான் பிடிக்கிறார்கள். பௌர்ணமியின்போதும் நதிகளில் வெள்ளமிருக்கும் போதும் பிடிப்பதில்லை.

ஜப்பானின் விஸ்தீர்ணம் 147, 593 சதுரமைல். இதில் கொரியா, மஞ்சூரியா, பெர்மோசா முதலியவைகள் சேர்க்கப்படவில்லை. ஜனத்தொகை 6,84,50, 000.

ஜப்பானில்தற்காலம் ஆளும் அரசரின் பெயர் ஹிரோஹிடோ. அவருக்கு மிகாடோ என்றும் ஒரு பட்டமுண்டு. அரசன் ஊர்வலம் செல்லும்போது வீட்டு மேல் மாடியிலிருந்து ஒருவரும் அரசனைப் பார்க்கக்கூடாது. அரசனின் உயரத்திற்குமேல் நின்று ஒருவரும் அரசனைக் கீழ்நோக்கிப் பார்க்கக்கூடாதென்பது அவர்களின் கொள்கை. அரண்மனைக்குமேல் ஆகாயக்கப்பலில் ஒருவரும் பறக்கக்கூடாது.

ஜப்பானியர்கள் கல்வியில் மிகவும் தேர்ச்சிபெற்று இருக்கிறார்கள். ஆறுவயதான ஒவ்வொரு சிறுவனும் சிறுமியும் பள்ளிக்கூடத்தில் சேர்ந்து ஆரம்பக்கல்வி கற்றுகவேண்டும். இவ்வளவு சிறிய தேசந்திலேயே, 25, 626 ஆரம்பப் பள்ளிக்கூடங்களும், 296 விவசாயப்பள்ளிக்கூடங்களும், 4,500 கைத்தொழில்கள் கற்றுக்கொடுக்கும் பள்ளிக்கூடங்களும் இருக்கின்றன. விவசாயத்தொழில் கற்றுக்கொடுப்பதைவிடக் கைத்தொழில் கற்றுக்கொடுப்பதற்கு அவர்கள் எவ்வளவு பணம் செலவழிக்கிறார்கள் என்பது மேல் கூறியவற்றால் தெரியவரும். உயர்தரப்படிப்பிற்காக 46 கலாசாலைகள் இருக்கின்றன.

சமீபத்தில் ஜப்பானியர்கள் தமது கப்பல்படையை மிகவும் பலமுள்ளதாகச் செய்து இருக்கிறார்கள். ஆங்கிலேயர்களும் அமெரிக்கா தேசத்தினரும் ஜப்பான் தனது கப்பற்படையைக் குறைக்கவேண்டுமென்று கூறுகின்றனர். ஆனால், ஜப்பான் அதைச்சிறிதும்மதிக்காமல் இன்னும் அதிகரிக்கப் போவதாகத் தெரிகிறது. கலாசாலையில் படிக்கும் ஒவ்வொரு மாணவனுக்கும் இராணுவப் பயிற்சி அளிக்கப்படுகிறது.

எவ்வளவு அத்தியாவசியமாயிருந்தாலும் அவர்கள் அயல்நாட்டுப் பொருட்களை வாங்குவது இல்லை. அவர்களுக்குத் தேவையான பொருட்களை எல்லாம் தம் நாட்டிலேயே செய்துகொள்ளுகிறார்கள். அவர்களுக்கு இந்திய மாம்பழங்களென்றால் மிகவும் பிரியம். மாமரத்தைத் தம் தேசத்தில் பயிரிட வேண்டுமென்று எவ்வளவு பாடுபட்டும் அது முளைக்கமாட்டேன் என்கிறது. என்ன செய்வார்கள் பாவம்! ஆனால் கட்டுப்பாட்டுடன் இந்திய மாம்பழங்களைத் தம் தேசத்தில் இறக்குமதி செய்யக்கூடாதென்று அநேக நிர்பந்தங்களை விதித்து இருக்கின்றனர்.

ஜப்பானில் பயண வசதிகள், அநேக ஐரோப்பிய நாடுகளைவிட உயர்ந்த நிலைமையில் இருக்கின்றன. அவர்களின் தேசத்தில் ஓடும் நதிகள் மிகவும் குட்டையாயும் வேகமாயும் இருப்பதால், மின்சாரம் அதிகச் செலவின்றிக் கிடைக்கின்றது. எங்கு கண்டாலும் மின்சார ரெயில்களும் டிராம் வண்டிகளும் ஓடுகின்றன. கோப் என்னும் பட்டணத்திற்கும் ஓஸாகா என்னும் பட்டணத்திற்கும் நடுவில் இரு குன்றுகள் இருக்கின்றன. ஒரு குன்றின் உச்சியிலிருந்து மற்றொன்றிற்கு மின்சாரக் கம்பிகள் கட்டி இருக்கின்றனர். அவைகளில் வண்டிகள் ஓடுகின்றன.

மியனோஷிடா என்னும் ஊருக்கு அருகில் கந்தக ஊற்றுகள் இருக்கின்றன. இவைகளிலிருந்து மிகவும் சூடான வெந்நீர் கிளம்புகிறது.

ஜப்பானியர்கள் சீனர்களைச் சிலவிதத்தில் ஒத்து இருக்கின்றனர். ஜப்பானியர்களும் துக்கம் கொண்டாடும்போது வெள்ளையுடையும், மணத்தின் போது கருப்பு உடையும் தரிப்பது வழக்கம். இவர்களின் பாஷையில் சீன பதங்கள் அநேகம் இருக்கின்றன. சீனர்களைப்போல ஜப்பானியர்களும், உயிரெழுத்து மெய்யெழுத்தின்றி ஒவ்வொரு பதத்திற்கும் ஒரு குறியை ஏற்படுத்திக்கொண்டு இருக்கின்றனர். ஆனால் சீனர்களைப்போல் சோம்பல் குணமில்லாமல் எப்போதும் ஊக்கமும் சுறுசுறுப்பும் உடையவர்கள்.

* * * *

ஹாஸ்யப் பகுதி

# உத்தியோகம்

"உமேஷ்"

ஜுன் 15-ந் தேதியானதும் கெஜட்டில்என்பெயர் வெளியாயிற்று இங்கு வீட்டிலும் என் எதிர்காலத்தைப்பற்றித் தீவிர வாத விவாதங்கள் நடந்தன. பெண்ணை பெற்றவர்கள் வேறு, கடிதத்தின் மேல் கடிதம் போட ஆரம்பித்தார்கள். ஒரு வேளை அவர்கள் மனதில் S. S. L. C பாஸ் செய்தவுடன் ஒருவன் விவாஹ யோக்யதை பெற்றுவிடுகிறான் என்னும எண்ணம்போலும் அல்லது S. S. L. C. சர்டிபிகேட் விவாஹ யாத்திரையின் பாஸ்போர்ட்போலிருக்கிறது.

நான் எப்படியும் என் பெயரின் பின்னால் இரண்டெழுத்தைச் சேர்த்துக்கொள்ளாவிட்டால் இந்த மனித ஜன்மமெடுத்தும் பயனில்லை என்று நினைத்தேன். ஆனால் என் தகப்பனார் "படிச்சுப் படிச்சு என்னடா பிரயோஜனம் ஏதாவது தொழில் பழகு" என்று உத்திரவு போட்டுவிட்டதால் என் எண்ணத்தை மாற்றிக்கொள்ள வேண்டியதாய் விட்டது.

என் எதிர் காலத்தைப் பற்றி நிர்ணயிக்க எங்கள் வீட்டில் ஒரு வட்ட மேஜை மஹாநாடு போலீஸ் கான்ஸ்டபிள் அருணாசலன் மனைவி தலைமையில் கூடியது. பலசரக்குக்கடை பாலசுப்ராய செட்டியார் மனைவி பார்வதியம்மாள் "பையனுக்கு ஒரு கடை வைத்துக் கொடுத்துவிடுங்கள். சுகமாக ஜீவனம் செய்வான்" என்றாள். திண்ணைப்பள்ளிக்கூட உபாத்தியாயர் சிவகுருநாதபிள்ளை மனைவி "ஒரு சிறு பள்ளிக்கூடம்போடச் சொல்லுங்களேன். ஏதோ மாதம் 10 ரூபாய் வந்தாலும் கண்ணெதிரில் இருப்பான்" என்றாள். தையற்கார நஞ்சப்பன் மனைவி ஒரு வருஷம் பையனைத் தையல் வேலைக்குப் பழக்குங்கள். பின் எப்படியோ தினம், ஒண்ணு அரை சம்பாதித்துக்கொள்வான்" என்றனள். தலைவி சர்க்கார் உத்தியோகத்திற்கு மிஞ்சினது வேறு உண்டா? சம்பளம் 15 ரூபாயானாலும் மேல்வரும்படி அதைப்போல் இருமடங்கு கூடக் கிடைத்துவிடும்" என்றாள். இன்னும் பலரும் தங்கள் அமூல்யயோசனைகளைப் பகரும் கிருபை கூர்ந்தனர்.

நான் படித்தால் காலேஜில் படிப்பது, இல்லாவிட்டால் ஏதாவது கிளார்க் உத்யோகம் செய்வதென்று தீர்மானித்துக்கொண்டேன். என்னவிருந்தாலும் எனக்கு வேட்டைக்காரன்புதூரைப்போன்ற பட்டிக் காட்டில் இருக்கப் பிடிக்கவேயில்லை. டாக்டர் தர்மராஜ அய்யருக்கு பேப்பர் தினம் வருகிறது. அதிலிருக்கும் 'தேவை' விளம்பரங்களைப் பார்ப்பதும் அதற்கு விண்ணப்பம் போடுவதும் தான் தற்சமய உத்தியோகம். தினம் தப்பினாலும் விண்ணப்பம் போடுவது தப்புவதில்லை.

நானும் எவ்வளவோ பேருக்கு விண்ணப்பம் போட்டுவிட்டேன். ஒரு அயோக்யனாவது பதில் எழுத வேண்டுமே! இவர்கள் பின் ஏன் விளம்பரம் செய்கிறார்களோ தெரியவில்லை.

மதராஸ் லெடாஸ் இன்ஷ்யூரன்ஸ் கம்பனியிலிருந்து ஒரு கடிதம் வந்தது அவர்கள் என் யோக்யதையைப் பார்த்து சந்தோஷப்படுவதாகவும் ஆனால் 4000-ரொக்க டிபாசிட் வேண்டுமென்றும் டிபாசிட் கட்டின உடனே வேலையில் வைத்துக்கொள்வதாகவும் எழுதினார்கள். 4000 ரொக்கம் வைத்துக்கொண்டு இவனிடம் தான் வேலைக்குப் போக வேண்டுமாக்கும். மற்றொரு கடிதம் சேட் ஹீராசந்த் கோகுல் ராம் அண்ட் கம்பனியாரிடமிருந்து வந்தது அதில் என்னை மாதம் 15 ரூபாய் சம்பளத்தில் வேலைக்கு அமர்த்திக் கொண்டதாகவும் உடனே புறப்பட்டு வரும்படியும் எழுதியிருந்தார்கள். 15 ரூபாய் சாப்பிடக் கூடப் போதாதே! இவனிடம் வேலை எப்படி செய்வது?

கடைசியில் "தி எழரை நாட்டான் பாங்க்" லிமிடெட் என்னை ரூ. 25 சம்பளத்தில் வேலைக்கு வைத்துக்கொள்வதாக எழுதினார்கள். யாராவது ஒரு பெரிய மனிதரிடம் சிபார்சுக் கடிதம் வாங்கிக்கொண்டு நேரில் வரச் சொல்லி உத்திரவு வந்தது.

என் சந்தோஷம் கரைபுரண்டு ஓடியது. எங்கள் ஊர் பழனிசாமி கவுண்டர் எம். எல். ஏ. விடம் ஒரு கடிதம் வாங்கிக்கொண்டு புறப்பட்டேன். என் தகப்பனார் முகூர்த்தம் பார்த்துச் சொன்னார். (முன் ஏற்பாட்டின்படி) நான் புறப்படும்போது சுமங்கிலி பாற்கலயம் எதிரில் கொண்டு வந்தாள். சகுனமும் நல்லதாகிவிட்டதல்லவா?

மறுநாள் "தி எழரை நாட்டான் பாங்கி" லிமிடெட் காரியாலயத்தை அடைந்தேன். இனி என்ன நமக்குக் குறைவு என்று ஆனந்தமடைந்தேன்.

சேவகனிடம் கார்டில் விலாசம் எழுதிக் கொடுத்தனுப்பினேன். மானேஜர் வரும்படிச் சொல்லியனுப்பினார். நான் அவர்முன் சென்று நமஸ்காரம் செய்துவிட்டு சிபார்சுக் கடிதம் இருந்த கவரை நீட்டினேன். வெகுநேரம் அதைப் பார்த்துக் கொண்டிருந்தார் மானேஜர். நான் கவனமாக அவர் முகத்தைக் கவனித்தேன். அவர் முகத்தில் கோபாக்னி ஜ்வலித்துக் கொண்டிருந்தது என் திருஷ்டி அக்கடிதத்தில் விழுந்ததும் சங்கதியறிந்துகொண்டேன்.

வே. புதூர்.

ப்ரிய மணி!

உன் கடிதம் கிடைத்தது. அதன் பிரகாரம் புறப்பட்டு வரமுடியவில்லை. காரணம் ஏதோ ஒரு அயோக்யன் "தி எழரை நாட்டான் பேங்க்" லிமிடட்டின் மானேஜர் என்னை வரும்படி அழைத்திருக்கிறான். உத்யோகம் கொடுக்கிறானாம். இனி அவனுக்கு எழரை நாட்டான் பிடித்துக்கொண்டிருக்கிறது போல் எனக்கும் பிடித்துக் கொள்ளும் போலும். நான் என்ன செய்வேன்! எல்லாம் அதிர்ஷ்டம். மற்ற விஷயம் மறு தபாலில்.

உன்......உமேஷ்

தவறுதலாக நண்பனுக்கு எழுதி வைத்திருந்த கடிதத்தை மானேஜருக்குக் கொடுத்துவிட்டேன்.

"எங்கள் ஆபீஸில் வேலை காலியில்லை."

இதைக்கேட்டதும் இடிவிழுந்த நாகம்போன்று துடிதுடித்தேன்.

"ஏன் வேறு யாராவது சேர்ந்துவிட்டார்களா?"

"ஒருவரும் சேரவில்லை"

"பின் ஏன் என்னை வரச் சொல்லிவிட்டு..?"

"நீ இவ்வளவு அயோக்யனாய் இருப்பாயென்று நான் நம்பவில்லை."

"ஏய்! ஜாக்கிரதையாய்ப் பேசும். என்ன அளவுக்கு மீறுகிறீரே"

"சரி வெளியில் போ."

"என்னய்யா விளையாடுகிறீரா? வரச்சொல்லிவிட்டு"

"ப்யூன்! வெளியில் கொண்டு போ இந்த மடையனை"

ஒரு நிமிஷத்தில் நான் வெளியேற்றப்பட்டேன். எனக்கு இனி என்ன தொழில் செய்வதென்று தோன்றவில்லை. யாராவது யோசனை சொன்னால் நன்றியறிதலுடன் ஏற்றுக் கொள்ளத் தயார்.

"ப்யூன்! வெளியில் கொண்டுபோ இந்த மடையனை!"




# மரியாதைராமன் கதை

அயலான் மனைவியைத் தன் மனைவியென்றது.















நோயற்ற வாழ்வு

# சோதை என்னும் நீர்க்கோவை

——:[^]:——

(வைத்யரத்ன பண்டித எம். துரைசாமி ஐயங்கார் ஆயுர்வேத பூஷணம் ஆயுர்வேதாசார்ய அவர்கள் எழுதியது.)

[சோதை என்கிற நீர்க்கோவையைப்பற்றிய இக்கட்டுரையைக் கருத்துடன் படித்தால், பலரும் சரீர பலம் சீரழிவதால் ஆகும் இக்கோளாறுக்கு ஆளாகாமல் முன்னெச்சரிக்கையுடன் இருந்து, முதுமைப் பருவத்திலும் ஏற்ற உடல்வன்மையோடும் உத்ஸாஹத்தோடும் உயிர்வாழலாம்.]

இந்த நோயின் காரண-லக்ஷணாதிகளை இந்நிரூபத்தில் கூடுமானவரையில் அனைவரும் எளிதில் அறியுமாறு விளக்க உத்தேசிக்கிறேனாயினும், இது மற்ற நோய்களைப்போல் ஏதோ ஒரு குறிப்பிட்ட அவயவத்தின் கோளாறுலேயோ, ஒரு குறிப்பிட்ட அவயவத்தைப் பற்றியாகிலும் காணாமல், பல வேறு அவயவங்களையும் பல வேறு காரணங்களையும் ஆதாரமாகக்கொண்டு தோன்றுவதால், இதைச் சுருக்கி விளக்குவது சுலபமான காரியமல்ல. ஆகிலும் ஆரோக்கிய விஷயத்தில் கருத்துள்ள நண்பர்கள், மற்றக் கதைகளைக் கூறும் கட்டுரைகளைப்போல் ஸ்வாரஸ்யங் கொடாவிடினும் இவ்வித வியாஸத்தை வெகு உபயோகமுள்ள விஷயமெனக் கருதி விடாது வாசித்துப் பயன்பெறுவரென்று எண்ணுகிறேன்.

சோதை, சோபை, சோகை, நீர்க்கோவை என்று இவ்வியாதி வெவ்வேறு பெயர்களால் வழங்கப்படுகிறது. நீரேற்றம் என்றும், வீக்கமென்றும்கூட இதைச் சாதாரணமாகக் கூறுவர். விஷய தத்துவமுணர்ந்தவர்கள் இதைச் சுதந்திர வியாதியாகக் கூறாது, வேறு வியாதியின் அல்லது வியாதிகளின் குறியாகவே சொல்வது வழக்கம். இரத்தாசயம் என்கிற இருதயம், கல்லீரல் என்கிற யக்ருத் மூத்திரக் குண்டிக்காய் என்கிற வ்ருக்கம் ஆகிய இவ்வுள்ள அவயவங்களில் ஏதேனும் நீடித்த நோயால் தாக்கப்பட்டிருப்பதற்கு இச்சோதை என்பது ஒரு பொதுக்குறியாகத் தோன்றும். பாண்டுரோகத்திலும் சோதை ஒரு முக்கிய லக்ஷணம்; ஆனால் மற்றச் சோதைகளைப்போல் பாண்டுசோதை மிகக் கடுமையானதுமல்ல; சிகித்ஸைக்கு எளிதில் வசப்படாததுமல்ல.

### வியாதி ஏற்படும் வகை

இரத்தத்திலிருந்து நீர்ப்பொருள் நிரம்பவும் சர்மத்திற்கு அடியிலுள்ள மெல்லிய கலைகளென்கிற ஜவ்வுப் போர்வைகளில் கசிந்து சேர்ந்துவிடுவதால் சோதை என்கிற நீரேற்றங் காணும்.

“ரக்த பித்த கபைர்வாயுர் துஷ்டோ நீரம் பஹிஸ்ஸிரா:
நீத்வா ருத்த கதிஸ்தைர் ஹி த்ர்யாத் த்வங்மாம்ஸ ஸம்ச்ரயம்
உத்ஸேதம் ஸம்ஹதம் சோதம் தமாஹுர் நிசயாததா:”

என்று அதே தத்துவம் மாதவ நிதாநாதிகளில் நன்கு விளக்கப்பட்டிருக்கிறது. இந்த ச்லோகத்தின் முழுக் கருத்தையும் இன்னும் சற்று விளங்கக் கூறுகிறேன். ஆரோக்கிய நிலைமையில் உடலெங்கும் வலை பரப்பியமாதிரி ஸர்வவியாபியாகப் பரவியுள்ள தந்துகிகளென்கிற அதி ஸூக்ஷ்மமான இரத்தக் குழாய்களின் மூலமாய் இரத்தத்திலிருந்து லஸீகையென்கிற நிணநீர் வெளி வந்து எப்பொழுதும் ஸகல தாதுக்களையும் நனைத்துப் போஷித்து வருகிறது; இதனால் போஷணை மாத்திரமல்ல, அகில அவயவங்களும் அவசியமான வகைகளில் அசைந்துழலவும் அனுகூலம் ஏற்படுகிறது. அவயவங்களுக்கு உபயோகமான பிறகு இந்த நீர் அதேவிதமான ஸூக்ஷ்ம ரத்தக் குழாய்கள் உருவான சோஷண ஜாலங்களால் உறிஞ்சப்பட்டு, மீண்டும் சுத்தமாவதற்காக இரத்தாசயம் நோக்கித் தள்ளப்படுகிறது. நிணநீர் தந்துகிகளால் அதிகமாகத் தாதுக்களில் பொசித்துத் தள்ளப்பட்டு, சோஷண ஜாலங்கள் பலக்குறைவடைந்து அவற்றால் அந்த நீர் உறிஞ்சப்பட்டு இரத்த கோசத்துக்கு அனுப்பப்பட வல்லமையில்லாமற் போனால், அந்த நீர் ஆங்காங்கு சர்மங்களுக்கும் மாமஸ பேசிகளுக்கும் இடையில் கிரமமாகத் தங்கிப்போய், சோதையை உண்டுபண்ணுகிறது. இது தீவிரமாகவும் இருக்கலாம், மந்தமாகவும் ஏற்படலாம். வாத தோஷத்தின் பிராபல்யத்தினால் இருதயத்தின் வேலை அதிகரித்து, தந்துகிகள் மூலம் நிணநீர் மேன்மேலும் அதிகமாக தாதுக்களில் சேருவதால் தீவிர சோதை உண்டாம்; இவ்வித சோதை திடீரென்றும், வாதத்தின் விஷம வேகத்தினால் சில ஸமயம் படபடத்த இரத்தவோட்டத்தின் காரணமாகவும் காண்பதுண்டு. நீண்ட காலமான



''வெய்யிற்கால தாகசாந்தி''

அல்லது மந்தமான சோதையில் சோஷிணிகள் என்கிற நுண்ணிய இரத்தக் குழாய்கள் வாதவேகம் இழந்து, சக்திக் குறைவடைந்து தாதுக்களிற் சேரும் நிணநீரை அப்போதைக்கப்போது போதுமாறு உறிஞ்சி உயரக் கொண்டுபோக வகையில்லாமலிருக்கும். இதனுல் தாதுக்களின் ஒரு பாரிசத்தில் சேர்ந்துள்ள நிணநீர் அருகிலுள்ள இதர தாதுக்களிலும் பரவி, வெவ்வேறு அவயவங்களில் மெள்ளமெள்ள சோதையை உண்டு பண்ணும். மெல்லிய ஜவ்வுச் சதைகளுக்கிடையில் நீரேற்றத்தின் அளவு அதிகரிக்கும் கால அளவைப் பொருந்தியது. இதன் தீவ்ர-மந்தத் தன்மைகளின் பிராபல்ய-அப்பிராபல்ய ரூபமான வித்தியாஸங்கள் ஒருவனுக்கு தந்துகிகளென்கிற நுண்ணிய இரத்தக் குழாய்கள் வெகு துரிதமாக நிணநீரை அளவுக்கு மிஞ்சி தாதுக்களிற் பொசித்துக் கொட்ட, அவ்வளவு நீரையும் அதே வேகத்தில் சோஷணக் குழாய்கள் (அப்ஸார்பெண்ட்ஸ் என்று ஆங்கிலத்தில் வழங்கப்படுபவை) உறிஞ்சாமல் வழக்கமான இயற்கை வேகத்தில் ஆகர்ஷித்துக் கொண்டிருப்பதால் சோதை ஏற்படுகிறது. மற்றொருவனுக்குத் 'தாதுக்களில் பொசிந்து வரும் நிணநீர் வழக்கம்போல் இயற்கையளவாகவே இருக்க, ஆசூஷணிகள் என்கிற சோஷணக்குழாய்கள் வலிமையிற் குன்றியோ வழி அடைபட்டோ தாதுக்களில் விழுந்த நீரை வழக்கப்படி ஆகர்ஷித்து இரத்தாசயத்திற் சேர்க்க வகையில்லாமற் போவதால் நீர்க்கோவை காண்கிறது.

## பலவகைச் சோதைகள்

எங்கெங்கு உடலுக்குள் பை போன்ற ஆசயங்கள் அல்லது கோசங்கள் என்னும் பாகங்கள் அமைந்திருக்கின்றனவோ எங்கெங்கு நெகிழக்கூடிய அல்லது தளர்வான மெல்லிய ஜவ்வுபோன்ற மிருது சர்மங்கள் உண்டோ அவ்விடங்களில் நீர் சேர்ந்து சோதையுண்டாவது வழக்கம். இயற்கைத் தத்துவம் இவ்விதம் இருப்பினும், தேஹத்தில் சிற்சில அவயவங்களில் மட்டும் மற்றப் பிரதேசங்களைக் காட்டிலும் முக்கியமாகவும் வழக்கமாகவும் வீக்கம் விசேஷமாகத் தோன்றுவதுண்டு; ஆகவே அவற்றை அவ்வயவத்திற்கேற்ப வெவ்வேறு பெயர்களைக் கொண்டு அழைக்கிரேம். உதாரணமாகச் சிரஸ்ஸிலும் முகத்திலும் உள்ள நீரேற்றத்தை ஜலமஸ்தக ரோகமென்றும், தமிழில் விசேஷமாக ஊது காமாலை அல்லது சோகை என்றும் கூறுவர். மார்பறைக்குள் வீக்கம் ஏற்பட்டால் அது சிலேஷ்ம சோதையென்றும், வயிற்றில் நீரேற்றமுண்டானல் அது ஜலோதரம் அல்லது மஹோதரம் என்றும் பீஜகோசத்தில் உண்டானல் அது அண்டவ்ருத்தியென்றும் கை-கால்களில் ஏற்பட்டால் அது ஸாதாரண சோதை அல்லது கை-கால் வீக்கம் என்றும் வழங்கப்படுவதைப் பலர் கேட்டிருக்கலாம். உடல் முழுவதும் உண்டாகும் வீக்கத்தைச் சர்வாங்க சோதை என்பர்.

### காரணங்கள்

மலசோதனை சரிவர நடைபெறுமலும், குடலிற் சேர்ந்துள்ள பழைய மலங்களை அப்போதைக்கப்போது விரேசனாதிகளால் வெளிப்படுத்த முயலாமலும் இருந்தால் பழைய அல்லது பலவிதமான கச்மலங்கள் இரத்தத்திலும் இதர தாதுக்களிலும் ஊறி சோதைக்குக் காரணமாகும். விஷமஜ்வரம் (மலேரியா) முதலிய சில வியாதிகளால் மண்ணீரல் என்கிற ப்லீஹமும், இரத்தமும் மிகக் கோளாறடைந்து, அதன் மூலமாகவும் இவ்வியாதி யுண்டாகின்றது. க்ஷாரங்கள் என்கிற சில கடுமையான காரங்களையோ எளிதில் ஜீரணமாகக்கூடாதவெண்ணெய் வேறு கொழுப்புள்ள வஸ்துக்களையோ அமிதமாகவும் அடிக்கடியும் உபயோகிப்பது முதலிய ஹேதுக்களால் மூத்திரக் கிரந்திகள் என்கிற வ்ருக்கங்கள் (கிட்னீஸ்) வியாதி கொள்வதும் நீர்க் கோவைக்கு காரணமாகும். அவ்விதமே கல்லீரல் என்கிற யக்ருத் இருதயம், புப்புஸங்கள் என்கிற ச்வாஸ கோசங்கள் இவை நோய் கொள்வதாலும் சோதையுண்டாவது வெகு ஸாதாரணம். இரத்தத்தில் சோணித ஸத்துவம் குறைந்து, அது நிறத்தில் வெளுத்துப் போய் பாண்டு ரோகம் என்கிற நிலைமை காண்பதும் குடலில் நாடாப்பூச்சி முதலிய கிருமிகள் சேருவதும் சோதைக்குக் காரணங்களாகும். குளிரிலும் மழையிலும் அடிபடுவதால் அல்லது வேறு வகையில் தேஹம் சீதபாதைக்கு உட்படுவதால் சிலருக்கு இக்கோளாறு காண்பது வழக்கம். போஷணைக் குறைவும், உணவின்மையுங் கூட இதற்குக் காரணமாவதுண்டு. ஸ்திரீகளுக்கு மாதவிடாயில் ஏற்படும் மாறுதல்களை அல்லது ஒழுங்கீனங்களை ஆதாரமாகக் கொண்டு அநேகம் பேருக்குச் சோதை ஸம்பவிப்பதும் ஸஹஜம். கருத்தரிக்கையில் பலருக்குக் கால்களிலும், வேறு பாகங்களிலும், வீக்கம் தோன்றுமாயினும், அது பிரஸவித்தபின் தானே தணிந்து விடும்! ஆனால் பிரஸவ சமயத்தில் அல்லது பிரஸவமான பின்பு அபத்தியமான சில ஆஹார-ஆசாரங்களாலும் கருப்பையில் ஏற்படும் கோளாறுகளாலும் உண்டாகும் சோதையும் மற்றச் சோதைகளைப் போலவே தகுந்த சிகித்ஸை யில்லாவிடில் தீங்கு விளைவிக்கும்.

### சிகித்ஸை

இந்த வியாதிக்குச் செய்யும் பரிஹாரமுறை இயற்கையினும் அதிகமாக ஆங்காங்கு சேர்ந்துள்ள நீரை வெளிப்படுத்துவதையும், மீண்டும் அவ்விதம் நீரேற்றம் உண்டாகாமலிருப்பதையுமே முக்கிய நோக்கமாகக் கொண்டது; ஏனெனில் சோதையானது வேறு வியாதிகளின் முக்கியக் குறிகளில் ஒன்றாகத் தொடர்ந்து ஏற்படுகிறதேயன்றி தனித்துச் சுதந்திர நோயாகத் தோன்றுவது அரிது. ஏற்ற போஷணையின்மையினால் ஏற்படும் சோதையில் பால், விசேஷமாகக் காய் கறிகள், ஆக்ஷேபமில்லாதவர்கள் மாம்ஸ ரஸம்-முட்டை முதலியவைகள், பருப்புவகைகள் முதலானவற்றை வேண்டியவளவு புஜித்து வருவதுடன் அயக்காந்த சிந்தூரமும் கூஷ்மாண்ட ரஸாயனமும் சேர்ந்தாற்போல் உபயோகிக்கப்படுவதாலும் அவர்களுக்கு அதிகப் பலன் தரக்கூடியதாயிருக்கும். வீக்கங் கண்டுள்ள வகையைக் கவனித்து, உடலிற் சேர்ந்துள்ள நீரை பலமான விரேசனாதிகளால் குதமார்க்கத்தின் மூலமாகவோ, சிறுநீரை விருத்தி செய்யக் கூடிய ஔஷதாதிகளால் வ்ருக்கங்களென்கிற மூத்திர மார்க்கங்கள் மூலமாகவோ பேதியாகவும் மூத்திரமாகவும் தாராளமாக வடியச் செய்யவேண்டும். சில வீக்கங்களில் ஸ்வேத்ய குணமுள்ள ஔஷதப் பிரயோகத்தினால் வியர்வை விருத்தி செய்து சர்மத்தின் மூலமாகவும் நீரை வெளிப்படுத்த முயல வேண்டி வரும். ஆகவே வியாதி நிலைமைகளைப் பகுத்தறிந்து மலவிரேசநம், மூத்திர ரேசநம், ஸ்வேதஜநகம் என்கிற குணங்களுள்ள ஔஷதங்களில் ஏற்றவைகளை உபயோகித்து, ஆபத்தான நிலைமை ஏற்படுவதற்கு முன்பே இவ்வியாதிக்குப் பரிஹாரம் செய்வது முறை.

பலமான வேலை செய்து, அல்லது வியாயாமம் செய்துவிட்டு, தேஹம் வியர்த்துக் களைத்திருக்கையில் சில்லென்று வீசும் குளிர்ந்த காற்றில் இருப்பதாலும், குளிர்ந்த நீரை அப்பொழுது அதிகம் உபயோகிப்பதாலும் உண்டாகிற ஸர்வாங்க சோதையில் வியர்வையைத் தாராளமாக உண்டாக்கக்கூடிய பரிஹாரம் அவசியம். அதற்குக் கருநொச்சித் தழை போட்டுக் காய்ச்சிய கொதிநீரிலிருந்து மேலெழும் சூடான ஆவியை உடலெங்கும் படியச் செய்தும், சீதாம்சு ரஸம், சீத பஞ்ஜீரஸம் முதலிய ஔஷதங்களை உட்கொண்டும் அவ்வித வீக்கத்தை வெகு எளிதில் தீர்க்கலாம். எவ்விதமான சோதையிலும் அபயாமோதகம், நாராசரஸம் ஆகியவற்றைப்போன்ற பலமான பேதி மருந்துகளை உட்கொள்ளக்கொடுத்து நன்கு விரேசநம் செய்விக்க வேண்டியது அவசியம். மூத்திர மார்க்கம் (வ்ருக்கங்கள்) கெடுவதாலான சோதைதான் வெகு தீமை விளைவிக்கக் கூடியது; இதை விஷபாண்டு (பிரைட்ஸ் டிஸீஸ்) என்பர். இதில் அடிக்கடியும்

முற்கூறிய விசேஷ மருந்துகளைக் கொடுப்பதோடு, நீரைப் பிரித்து வெளிப்படுத்த ஜலமஞ்ஜரீ ரஸம் வெகு சிலாக்கியமானதால், அதை மாத்திரை யுருவாகவோ, பஸ்பரூபமாகவோ (பஸ்பமானல் 10 முதல் 20 நெல்லெடை வீதம்) தினத்துக்கு மூன்று அல்லது நான்கு முறை வெந்நீருடன் உட்கொள்ளக் கொடுத்து வரலாம்.

வ்ருக்கக் கோளாறுலான வீக்கத்தில் முதலில் கண்ரெப்பைகளும் மர்மஸ்தானமும் சுருங்கித் துவளும்; ஆரம்பத்தில் பாதங்களிலும் அடுத்தாற்போல் கால்களிலும் வீக்கம் தோன்றும்; இவற்றைக்கொண்டு வ்ருக்க வியாதியே தற்கால சோதைக்குக் காரணம் என்றுணரலாம். இருதயம், ச்வாஸாசயங்கள் இவற்றின் நோயால் சோதை ஏற்பட்டிருந்தால் ஆரம்பத்தில் கைகளும், காலகளும் வீங்கி அப்பால் கிரமமாக அது ஸர்வாங்க சோதையாகவும் மாறும். இது இருதயத்தைப்பற்றியதானல் நீரை வெளிப்படுத்த முதலில் சில நாள் ஜலமஞ்சரீ ரஸம்உபயோகித்து அத்துடனே அல்லது சில நாள் சென்றபின்போ தசமூலாரிஷ்டம், பார்த்தாரிஷ்டம் என்கிற திராவகங்களைச் சமமாகக் கலந்து வேளைக்கு ஒரு அவுன்சு வீதம் தினத்துக்கு மூன்று முறையாகச் சிலநாள் உட்கொண்டு வருவது நலம்.

சோதை ச்வாஸாசய நோயால் உண்டானதாயிருந்தால் லோகநாத ரஸம், ஸிதோபலாதி சூர்ணம் இவற்றை முறைப்படி (15 நெல்லெடை ஸிதோபலாதி, 5 நெல்லெடை லோகநாதம்) கலந்து தினம் 3 முறையாகத் தேன் கூட்டி உட்கொண்டு வருவதோடு, சிறு நீரை வெளிப்படுத்த முன்போல் ஜல மஞ்ஜரீ ரஸத்தையும் தினத்துக்கு இரு முறையாகச் சாப்பிட வேணடும். வீக்கம் வடிந்த பின்பு லோஹாஸவமும், பிரவாள பஸ்மமும் இரத்தம் சுத்தமாவதற்காகவும், சவாஸாசயம் பலப்படுவதற்காகவும் சில வாரங்கள் உட்கொண்டு வருவது நலம். யக்ருத் (கல்லீரல்) ப்லீஹம் (மண்ணீரல்) இவற்றின் கோளாறுலான வீக்கத்தில் முதலில் வயிறு வீக்கங்கொள்ளும்; இதை மஹோதரம் அல்லது ஜலோதரம் என்று வழங்குவோம். இதில் வயிற்றில் நீரேற்றம் மிகுதியாயேற்பட்டு, வயிறு சாலைப்போல் பருத்துப் போம். இதற்கு ஜலமஞ்ஜரீ ரஸம் வெகு உபயோகமானது. தினந்தோறும் அபயாமோதகம், ஸைந்தவாதி கஷாயம் முதலியதைக் கொடுத்து ஐந்தாறு முறை விரேசநமாகச் செய்து, 15 முதல் 20 நெல்லெடை வீதம் ஜலமஞ்ஜரீ ரஸத்தையும், வெள்ளைச்சாறடைச் சாற்றையும் (2 அவுன்சுக்குக் குறையாத அளவில) தினத்துக்கு 3 முறை உட்கொள்ள வேண்டும். பாஸ்கர லவண சூர்ணத்தை 20 அல்லது 30 நெல்லெடை வீதம் வீக்கம் குறைந்த பிறகு தினத்துக்கு மூன்று வேளையாக வெந்நீருடன் சில நாள் உபயோகிப்பதால், கல்லீரல் ஸம்பந்தமான கோளாறு நிவ்ருத்தியாகும்.

இதில் வயிற்றைக் குத்தி, நீரை வெளிப்படுத்தும் முறையைப்பற்றி இப்பொழுது மேனாட்டு வைத்தியர் நிகழ்த்துவது போல், சரகர், வாக்படர் முதலியவர்களும் எழுதியிருக்கிறார்களாயினும், மேனாட்டார் அனுஷ்டிக்கும் அம்முறையால், முழு குணமும் பிணியாளிக்கு ஏற்படுவதில்லை யென்பது அனுபவத்தில் தெரிந்த விஷயம். ஏனெனில், நீரைக் குத்தி வெளிப்படுத்திய பின் மறுபடி வெகு சீக்கிரத்திலேயே அதிக நீரேற்றம் வயிற்றில் உண்டாவதைக் கண்டு வருகிறோம். மஹோதரத்தைப் பற்றிப் பிரஸ்தாபிக்கும் நிருபத்தில் இதைப்பற்றிப் பிறகு மற்றொரு ஸமயம் விஸ்தாரமாகக் கூறுவேன்.

சூதக தோஷத்தினால் (மாதவிடாய்க் கோளாறால்) உண்டாகும் வீக்கம் அதிக அபாயகரமானதல்ல. அநேகமாய் அதில் கால்களிலேயே வீக்கம் தோன்றுவது வழக்கம்; ஆனால் சிலருக்கு மாலைநேரம் நெருங்க நெருங்க கைகளிலும், முகத்திலும் அதிக வீக்கம் காண்பதுண்டு. இது பெரும்பாலும் அடியிற்குறிக்கப்படும் பாண்டு ஸம்பந்தமான வீக்கம் போலவே இருக்கும். இரத்தக் குறைவாலானபாண்டு ரோகத்தால் வீக்கம் தோன்றுவது வெகு ஸாதாரணம். இது உட்புற அவயவங்களை அதிகமாகப் பாதிப்பதில்லை, இதில் பாதங்கள், கணுக்கால், கண் ரெப்பைகள் இவை விசேஷமாக நீரேற்ற மடைந்து வீங்கும். இக் கோளாறைப் பரிஹரிக்க அயம் வெகு சிறந்த மருந்து. அயக்காந்த சிந்தூரத்தை வேளைக்கு 8-அல்லது 10 நெல்லெடை வீதம் நாளொன்றுக்கு மூன்று முறையாகச் சாப்பாட்டுக்குப் பிறகு, வியாதியின் பலா பலத்திற்குத் தகுந்தவாறு 20-நாள் முதல் 40-நாட்கள் வரையில் உபயோகிக்கலாம். அதிக லோஹம் கலந்துள்ள திரவவௌஷதமான லோஹாஸவம் என்னும் மருந்தும் இதில் அதிக உபயோகமுள்ளது. அச்வகந்தாரிஷ்டம் என்கிற ஔஷதத்தையும் பொதுவாக உடல் வன்மையடைவதற்காக முற்கூறிய ஔஷதங்களோடு உபயோகித்து வாலாம். வயிற்றில் கிருமிகள் சேருவதால் கூட முகம் முதலியது ஊதி வீங்கிப் போவது வழக்கம். அவ்வித நோயாளியைப் பரீக்ஷித்தறிந்து, கிருமிகள் இருந்தால்; ஒரு வாரம் வரையில் தினந்தோறும் காலையில் இரண்டொரு பலாசம் வித்துக்களை வேப்பம் கொழுந்துடன் அரைத்துப் பசுவின் பாலில் கரைத்துக் கொடுத்துவிட்டு அப்பால் நல்ல விரேசனௌஷதம் கொடுத்து கிருமிகளை வெளிப்படுத்த வேண்டும். இதில் பலனில்லாவிடில் கிருமிக்னவடி என்கிற மாத்திரையை இரண்டு நாள் கொடுத்து மூன்றாம் நாள் அபயாமோதகம் முதலியதைக் கொடுத்து பேதியாகச் செய்ய வேண்டும். அதற்குப் பிறகு காங்காயநகுடிகையையும், லோகாஸவத்தையும் சில நாள் கொடுத்து வந்தால் கிரமமாக வீக்கம் மறைந்துபோய், இரத்தமும் சுத்தமாய், தேஹ பலமும் விருத்தியடையும்.

முன்பு விவரித்த விஷயங்களிலிருந்து சோதையென்பது அநேகமாய் உட்புற அவயவங்களில் ஒன்றின் அல்லது பலவற்றின் கோளாறைக் காரணமாகக் கொண்டு உண்டாவதென்றும், ஆகவே உட்புறத்திற் கோளாறடைந்த அவயவங்களோடு வீக்கங்கொண்ட வேறு பாகமும் வரவர விகாரப்பட்டு, சீக்கிரத்திலோ சில காலம் கழித்தோ அந்நிலைமை ஆயுளுக்கே ஆபத்தாய் முடியக் கூடியதென்றும், சோதையின் தன்மையையும் மற்றக் குறிகளையும் பகுத்தறிந்து எவ்வெவ்வயவத்தின் கோளாறால் சோதை என்கிற விகாரம் தோன்றியதாகத் தெரிகிறதோ, அவ்வவ்வயவத்திற்கு அனுகுணமான பரிஹார முறையை முற்கூறிய வகையிற் கையாண்டு சிகித்ஸிப்பதே சிறந்த உபாயமாகுமென்றும் இக்கட்டுரையைப் படிக்கும் நண்பர்கள் நன்கறிவார்களென்று நம்புகிறேன்.










## தமிழ் பேசும் பட திருவிழா !

ஆஸந்தாஸின்

அதியற்புத பேசும் படம்

# நவயுவன்

அல்லது

# கீதாசாரம்

லண்டன்மாநகர் காக்ஷிகளுடனும், ஆஸந்தாஸுக்கென்றே

பிரத்யேகமாய் எடுக்கப்பட்ட மகுடாபிஷேக காக்ஷிகளுடனும்

கீழ்க்கண்ட இடங்களில்

## ஜூன்மீ 12உ சனிக்கிழமை முதல்

## ஆரம்பம்

## சென்னை — பாரகான் டாக்கீஸ் / கிரௌன் டாக்கீஸ்

| | | |
|---|---|---|
| திருச்சினாப்பள்ளி | - | ராஜா தியேடர்ஸ் & டாக்கீஸ் |
| மதுரை | - | ஸ்ரீ கோபால கிருஷ்ண டாக்கீஸ் |
| கோயமுத்தூர் | - | நியூ தியேடர் கர்னாடிக் டாக்கீஸ் |
| திருநெல்வேலி | - | பாலஸ் டீ வேல்ஸ் |
| சேலம் | - | ஸென்ட்ரல் டாக்கீஸ் |

மலாய்நாட்டில் மொத்த உரிமைக்குக் கீழ்க்கண்டவர்களுக் கெழுதுக:—

ஆஸந்தாஸ் க்ளாஸிகல் டாக்கீஸ்,

கலீல் மான்ஷன், மவுண்ட் ரோட், மதராஸ்.

Printed and Published by T. S. Visvanatha Iyer, B.A. at the Swadesamitran Power Press Mount Road, Madras-Editor C. R. Srinivasan, B.A.